श्री शङ्करभगवत्पादाचार्य विरचिता

# शिवानन्दलहरी

ஸ்ரீ சங்கர பகவத் பாதர் இயற்றிய

# சிவாநந்தலஹரீ



தமிழில் விளக்கம்

சி.வே. ராதாகிருஷ்ண சாஸ்த்ரி

॥ श्रीः ॥

शिवाभ्यां नमः

ஸ்ரீ சங்கர பகவத் பாதர் இயற்றிய

# சிவாநந்தலஹரீ

श्री शङ्करभगवत्पादाचार्य विरचिता

# शिवानन्दलहरी

தமிழில் விளக்கம் தருபவர்

**சி.வே. ராதாகிருஷ்ண சாஸ்த்ரி**

ஸ்ரீரங்கம்

வெளியிடுபவர்

ஸ்ரீ D. வைத்யநாதய்யர் மெமோரியல் ட்ரஸ்ட்

திருச்சி - 3

## சிவானந்தமெனும் பேரலை

பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யவர்ய - ஸ்ரீமத் கோவிந்த பகவத்பாத பூஜ்ய சிஷ்ய - ஜகத்குரு - ஸ்ரீ சங்கராசாரியர் என்று நீண்ட நெஞ்சிற்கினிய பிருதாவளி கொண்டவரை நாவிற்கினிக்க ''ஆசார்யாள்'' என்றே (செல்லமாக) ஜகத்குரு காஞ்சிப் பெரியவர்கள் தம் பேருரையில் குறிப்பிடுவார்கள். அவர்களுக்கும் இத்தனை நீண்ட பிருதாவளியிருந்தும் மக்கள் ''மஹா பெரியவாள்'' என்றே அவர்களை குறிப்பிடுவர். இவை தொடர்ந்த எல்லைக் காணாத நன்மதிப்பும் சிரத்தையும் பக்தியும் கனிந்த உள்ளத்திலிருந்து வந்த பெயர்கள். இங்கும் அந்த இரு பெயர்களைக் கொண்டே ஒரு சிறிய விளக்கம்.

ஆசாரியாள் எழுதிய எண்ணற்ற கிரந்தங்களில் சிவானந்தலஹரி மிகச்சிறியது. தத்துவ விளக்க நூலாக நிரடலாக இல்லாமல் ஒரு பாமரனின் மொழி போன்று இனிதாகச் சுவைக்கக் கூடியது. கருத்தாழமும் செய்திப் பரப்பும் அதிகம் காணவில்லை என்பவருமுண்டு.

ஆனால் மற்றத் துதி நூல்களில் காணப்பெறுதவாறு இறைவனுடன் காதோடுகாதாகப் பேசித் தனது பேரார்வத்துடன் இறைவனின் பெருமையையும் எளிமையும் ஆழ்மனத்தால் கண்டு பூரித்து நிற்பதை இறைவனிடமே பகிர்ந்து கொண்டு, இடையே இறைவன் இவரது அன்புக் கேள்விகளுக்குத் தந்த விடைகளையும் சுவைத்து சிவானந்தப் பேரலையில் திக்கு முக்காடி நிலைத்துத் தெளிந்து இறைவனது உயர் நிலையையும் பக்தனிடம் அவர் காட்டுகிற பரிவையும் இறைவனுக்கும் பக்தனுக்குமிடையே உள்ள அன்புப் பிணைப்பையும் ஆசார்யாள் தழுதழுத்து விளக்குவதை இதில் காணமுடிகிறது. இறைவனுடன் தொடர்பற்றவனுக்கும் இறைவனுடன் தொடர்பை விரும்பாதவனுக்கும் கூட இறுகிய உள்ளம் நெகிழும். இறைவனைப் பற்றிச் சிந்திக்கத் தூண்டும். பொருளுணர்ந்து பொருளில் ஊறிப் பாடத் தொடங்க நெஞ்சம் தழுதழுக்கும். கண்ணீர் மல்கப் புறக்காட்சி மறைந்து கண நேரமாவது இறைவனது திருவடிகளில் மனம் பதியும்.

கைலாஸம் சென்று சிவனைக் கண்டுகளிக்க ஏங்குவது. ஸ்ரீ சைலத்தில் பரமனைப் பல கோலங்களில் கண்டு களிப்பது.

திருவண்ணாமலையில் ஹரியும் பிரும்மாவும் அடிமுடி காண இயலா நிலைமையில் இறையருளை அவர்கள் வேண்டி நிற்பது ஒரு புறம் சித்தத்தில் காட்சி தர, எளியோனான தனக்கு எதிரே இறைவன் காட்சி தந்த எளிமையை நினைத்து இது உமக்குத் தகுமா என்று வினவுகிற மெய் மறந்த நிலை, காளஹஸ்தியில் கண்ணப்பரின் அன்புப்பிணைப்பில் இறைவன் கட்டுண்டதும் மார்க்கண்டேயனுக்காக யமனை உதைத்ததும் காட்டுகிற பக்திக்கு வசப்படுகிற பரமனின் எளிமை கண்டு நெகிழ்தல் தன் மனத்தைக் குரங்காக நடனமாடும் அரங்கமாக, இவ்வாறு ஏதேனும் ஒரு முறையில் ஏற்றுத் தன்னைக் கடைத்தேற்ற வேண்டுகோள், அமிதம் கடைந்த போது விடமுண்ட கண்டனாகி தன்னால் படைத்த உலகமும் வயிற்றுள் படைக்கப்படவிருக்கிற. உலகமும் தீய்ந்து விடாமல் உய்விக்கக் காட்டிய இறைவனது பரிவை நினைத்து சிலிர்த்துப் போதல். உணர்வுகளுக்கப்பாற்பட்ட இறைவன் உணர்வுகளுக்கு உட்படுபவனாகத் தன்னைக் காட்டிக் கொள்வதைப் பல வகைகளில் உணர்ந்து என்றும் தான் அவரது அருளுக்கு ஆட்பட்டிருப்பதை வெளியிடுதல்.

பக்தியின் பல்வேறு நிலைகளைக் கண்டுணர்ந்து ஏதேனும் ஒரு வகையில் ஒருவித எதிர்பார்வையுமற்ற கனிந்த அன்பு தன் சித்தத்தின் இயல்பாக அமையக் கோரிக்கை.

இறைவனது திருவடிகளில் காணிக்கையாக அர்ப்பணம் செய்ய உலகிலுள்ளது அனைத்தும் தகுதியற்றதென்ற நிலையில் சித்தமென்ற புஷ்பத்தைத் திருவடிகளுக்கு அணியத்தருவதே உயர்ந்தது என்ற பேரன்பலே.

இவற்றைச் சிறந்த சைத்திரிகனும் கற்பனையால் வரிவடிவம் அமைக்க முடியாததை - பக்தியுள்ளம் வரைந்த - தூரிகைக் கோடுகளாக ஒவ்வொரு சுலோகமும் முன் நிறுத்துகின்றன. மென்மையும் கனிவும் பரிவும் அன்பின் ஆழமும் இவற்றில் அலைபாய்கின்றன. பயமும் தயக்கமும் இன்றி இந்தப்பேரலை மோதலை உள்ளம் படைத்த மனிதன் ரசித்தனுபவிக்க முடியும்.

காஞ்சி மஹாபெரியவாளின் முன் நிகழ்ந்த நிகழ்ச்சி இது. இருபது ஆண்டுகளுக்கு முன். மஹாரசிகர்களான அடியார்கள் குழுமியிருக்க, ஆனந்தப் பெருக்குடன் 'அங்கோலம் நிஜ

பீஜஸந்ததி:'' என்று தொடங்குகிற சுலோகத்தை அவர்கள் தமக்கே உரித்தான ஏற்ற இறக்கம் நடு நடுவே மௌனம், என்ற தனித்த சைலியால் விளக்கி வருகிறார்கள். நடுவே ஒருவர் எழுந்து "திருவண்ணாமலையில் பகவான் ரமணர் சிவானந்தலஹரியில் பத்து சுலோகங்களைப் பொறுக்கி எடுத்து அதைத் தினமும் சொல்லும்படி உபதேசித்துள்ளார்கள். அதில் முதல் சுலோகம் இது. சுலோக வரிசை முன்னும் பின்னும் மாறியிருக்கும். அப்படிச் சொல்லலாமா ? அல்லது புத்தகத்திலுள்ள வரிசையில் சொல்வது நல்லதா ? என்று கேட்டார். "மஹான்கள் நல்லதெனக் கண்டுணர்ந்ததைத்தான் உபதேசிப்பார்கள். அதனால் எது நல்லதென்று சிந்திப்பது உசிதமல்ல. அவர்கள் உபதேசித்த வழியும் பெரியோர்கள் ஏற்றது. அந்த வரிசை பற்றிய குறிப்பு அடங்கிய சுலோகம் உண்டே ! என்று சிந்தித்து உடன் அந்த சுலோகத்தைச் சொன்னார்கள்.

''अं - भक् - जन - घटो - वक्षः गुहा -नर-गभी - वटुः ।
आद्या - दश शिवानन्दलहरी श्लोकसूचिका ॥''

१) अङ्कोलं निज *(சுலோ 61)* २ भक्तिर्महेश *(சுலோ 76)* ३) जननमृतियुतानां *(சுலோ 83)* ४) घटो वा मृत्पिण्डो वा *(சுலோ 6)* ५. वक्षस्ताडनशङ्कया *(சுலோ 65)* ६)गुहायां गेहे वा *(சுலோ 12)* ७) नरत्वं देवत्वं *(சுலோ 10)* ८) गभीरे कासारे *(சுலோ 9)* वटुर्वा गेही वा *(சுலோ 11)* १०) आद्याऽविद्या हृद्गता *(சுலோ 91)*

என்பவை அந்த பத்தும் -

ஸ்ரீ ரமணரும் ஸ்ரீ மஹாபெரியவாளும் எடுத்துத் தந்த இந்த பத்து சுலோகங்களையாவது தினமும் மனனம் செய்யக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்.

ஆசாரியாளுக்கு பரமபக்தி சிவபெருமானிடமா ? தேவியிடமா ? நாராயணனிடமா என்ற கேள்விக்கு விடை காண்பது எளிதல்ல. ஸ்ரீ மஹாபெரியவாளையோ ஸ்ரீ பெரியவாளையோ (பூஜ்ய ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதீ ஸ்ரீ சரணர்களையோ) நேரில் தர்சனம் செய்கிற பாக்கியம் பெற்றவர்கள், அவர்களது பரமசாம்பவமான தோற்றத்தையும்

காமாக்ஷியிடம் பக்தியையும், தரிசனம் செய்ய வருபவர்களை நாராயண நாராயண என வாழ்த்தியருள்வதையும் உணரும் போது அதுதான் ஆசாரியாளின் உண்மை நிலை என்றும் கொள்ள முடியும். இந்த ஸ்தோத்ரத்தில் சிவபெருமான் நாமங்களில் சிலவற்றை ஆசாரியாள் அதிக அளவில் ஸ்மரணம் செய்கிறார்கள். சிவன் (25தடவை) சம்பு (25தடவை) பசுபதி (17 தடவை) விபு (11தடவை) என்பவை அடிக்கடி வருபவை. பசுபதி என்ற பெயரைக் கூறும் போதெல்லாம் தனது பசு நிலையை இறைவனிடம் நினைவுபடுத்தி அதன் காப்பாளராக இருக்கிற பொறுப்பை வலிவில் ஏற்றுக் கொண்டுள்ளதையும் காட்டுவதாகிறது. த்ரிபுரஹரர், புரரிபு, புராரி கபாலீ, பிக்ஷு, நீலகண்டர் ம்ருத்யுஞ்ஜயர், ஆதிகிராதர், கிரிமல்லிகார்ஜுன மஹாலிங்கர், ஸ்ரீ சைலவாஸீ, பிரமராதிபர் என்ற லீலை சம்பந்தப்பட்ட பெயர்கள் அங்கங்கே காண்கின்றன. ஸ்வாமின்! எனத் தான் அவரது உடைமை என்பதையும் அவர் தனது உடைமையாளர் என்பதையும் நினைவுபடுத்துகிறார்.

பெரும்பாலான சுலோகங்களில் அவர் ஈசனுடன் ஸல்லாபம் செய்து கருத்து பரிமாறிக் கொள்வதைக் காணலாம்.

பக்தியில் நெகிழ்ந்த இறைவனும் பக்தனும் ஒருவருக்கொருவர் அன்பும் நன்மதிப்பும் கொண்டு பழகுகிற காட்சி உயிர்ச் சித்திரமாக இங்கு காட்டுப்படுகிறது. ஒவ்வொரு சுலோகத்தையும் இடையறாது மனனம் செய்வதே பேரானந்தம் தருகிறது.

இவற்றைத் தமிழாக்கித் தமிழ் கூறும் பக்தர்களிடம் அளிக்க என்னைத் தூண்டியவர் ஸ்ரீ கண்ணன் (ஸ்ரீ வெங்கடேசன்) இவர் தனது தந்தையின் பெயரில் அமைத்துள்ள ஸ்ரீ D. வைத்யநாதய்யர் மெமோரியல் டிரஸ்டின் மூலம் இதனை வெளியிடுகிறார். இதனை ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்து அதிபர்களான ஸ்ரீ சரணர்களின் திருவடிகளில் ஸ்ரீ சங்கர ஜயந்தி தினத்தில் குரு காணிக்கையாக ஸமர்ப்பிக்கிறேன்.

**S.V. ராதாக்ருஷ்ண சாஸ்த்ரி**

22. வீரேச்வரம் அப்ரோச் ரோடு
ஸ்ரீரங்கம்
ஸ்ரீ சங்கரஜயந்தீ - 8 - 5 - 2000

ஓம் நம: ஶிவாய

# शिवानन्दलहरी

# சிவாநந்தலஹரீ

कलाभ्यां चूडालंकृत शशिकलाभ्यां निजतपः-
फलाभ्यां भक्तेषु प्रकटित फलाभ्यां भवतु मे।
शिवाभ्या मस्तोक त्रिभुवन शिवाभ्यां हृदि पुन-
र्भवाभ्या मानन्द स्फुर दनुभवाभ्यां नतिरियम् ॥ १ ॥

கலாப்ப்யாம் சூடாலங்க்ருத ஶஶிகலாப்ப்யாம் நிஜதப:-
பலாப்ப்யாம் பக்தேஷு ப்ரகடிதபலாப்ப்யாம் பவது மே ।
ஶிவாப்ப்யா மஸ்தோக த்ரிபுவந ஶிவாப்ப்யாம் ஹ்ருதி புநர்-
ப்பவாப்ப்யா மாநந்த ஸ்புர தநுபவாப்ப்யாம் நதிரியம் ॥ 1 ॥

*பரம சிவனுக்கும் பரமசிவைக்கும் நமஸ்காரம்.* **(ஶிவாப்ப்யாம் நதி: இயம்)** *பரம்பொருள் மங்களமானது. பூ கோமாதா, யானை, ஸுமங்கலி, மஞ்சள், தயிர், கண்ணாடி எனப் பல மங்களப்பொருள்கள் உண்டு. இவையனைத்திலும் மங்களத் தன்மை உள்ளது. மங்களப் பொருள்களனைத்திலும் உள்ள மங்களத் தன்மையின் முழுவடிவமே இந்த தம்பதி. இருவருமே சிவர்கள். இவ்விருவரின் பிரியா இணைப்பே சிவம் - மங்களம். மங்கள முழுப்பொருளான பரம்பொருள் உலகத்தில் காணப்பெறுகிற பொருள்களனைத்தின் இதயத்திலும் வசிக்க விரும்பி பூர்ணப்பொருளாக, இரண்டாக - சிவமாக சக்தியாகத் தோன்றியது. பூர்ணப்பொருளை உணர இயலாதவர் பொருட்டு இனியதும் இனம் கண்டறியாததுமான நிலைக்கு (கல)மாறிக் கருணையால் தன்னை வடிவிற்குட்படுத்தி இரண்டாகியது -* **(கலாப்ப்யாம்).** *விளக்க இயலாததன் நிலையைத் தானேவிளக்க எடுத்த பகுதித்தோற்றமே கலை. அத்வைதப்பொருளானது, ஆணாகப் பெண்ணாக - கணவன் - மனைவியாக - மாறுபட்ட உருவமைப்புள்ளவர்களாக - மங்களத் தன்மையால் இரண்டறக்கலந்தவர்களாக இருவராகக் காட்சி தருகிறது.*

உருவகப்படுத்தமுடிந்த நிலையை மேலும் அழகுபடுத்த அணிகளை ஏற்று அந்த தம்பதி தம்மை நம்முன் நிறுத்துகின்றனர். (சூடாலங்க்ருத ஶஶி கலாப்ப்யாம்) நெற்றிச் சுட்டியாக சந்திரகலைகளை அணிந்துள்ளனர். சந்திரனும் பூர்ணனுகத் தென்படுவதில்லை. அவனும் கலையாகத் தான் தோன்றுகிறுன். அவனது பூர்ண நிலையும் மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாததே. தன்னை முன்நிறுத்திக் கொள்ள, சந்திரன் சிவர்களின் கருங்கேசக் கற்றையைப் பின்னணியாகக் கொள்கிறுன். அஷ்டமீ சந்த்ரவி ப்ராஜதளிகஸ்த்தல ஶோபிதா. (லலிதாஸஹஸ்ரநாமம்) சந்திரசேகரன், சந்திரசூடன் என்ற பெயராலேயே சிவபெருமான் அறிமுகமாகிறுர்.

நம்மிடமுள்ள கருணையால் பிரகாச நிலையிலிருந்து விமர்ச நிலைக்கு வந்த சிவனும் சிவையும், இணைந்ததோற்றத்தில் காட்சிதரப் பெரும் தவமியற்றி, அதன்பயனுக இணைந்தனர். (நிஜதப: ப்பலாப்ப்யாம்) சிவன் ஏன் தவம் புரிகிறுர்? எவருக்கும் அதன் காரணம் தெரியவில்லை ''ஏதோ விருப்பம் அவருக்கு. அது நிறைவேறத் தான் தவம்'' என்று மக்கள் கூறினராம். ''கேநாபி காமேந தபஶ் சசார.'' (காளிதாஸன்). வெளியில் சொல்ல வெட்க மிருந்திருக்கும் ! தேவியின் தவம் சிவனைக் கணவனுகப்பெற. சிவனது தவம் தேவியை மனைவியாகப்பெற. அந்த வேறு நோக்கற்ற தவமே கணவராகிய சிவனும், மனைவியாகிய சிவையுமாகப் பலித்தது. அவர்கள் தம்பதியானதன் பலன் உடன் பக்தர்களிடம் கருணையாக வெளிப்பட்டது. (பக்தேஷு ப்ரகடித பலாப்ப்யாம்) அந்தக் கருணை மூவுலகத்திற்கும் நிறைந்த மங்களமாக வடிவெடுத்தது. (அஸ்தோக த்ரிபுவந ஶிவாப்ப்யாம்). அவர்கள் எங்கே உள்ளனர்? என்று தேடத் தேவையில்லை. இதயத்தினுள் திரும்பிப்பார். வெளிப்பொருள் நாட்டமின்றி அவர்களது தரிசனமே வாழ்வின் பெரும்பயன் என்று கருதினுல், பக்தன் நினைத்த போதெல்லாம் - அடிக்கடி - மறுபடி மறுபடி - இதயத்தினுள் தோன்றுவர். (ஹ்ருதி புநர் ப்பவாப்ப்யாம்) அவ்வாறு மங்களமாகத் தோன்றவே பவனும் பவானியு மானவர்கள். (ப்பவாப்ப்யாம்) அந்தச் சின்னஞ்சிறு இதயாகாசத்தில். கொள்ளுமளவைப் பொருட்படுத்தாமல் பூர்ணாநந்தமாகப் பளிச்சிட்ட - நினைக்கும் போதெல்லாம் இனிக்கிற ஆனந்த அனுபவமாக - உணர்வில்

இடம் பெறாமல். ஆனந்த அனுபவம் மட்டுமே மீதமாக அவர்கள் இருப்பார்கள். அந்த ஆனந்தானுபவத்தைக் கலைத்துக் கொண்டு சிவனும் சிவையுமாக அவர்களைக் கண்டு அவர்களது திருவடிகளில் இந்த நமஸ்காரம். இதோ இதனை இறைவர்கள் ஏற்கட்டும். (இயம் மே நதி:பவது). நமஸ்கார முறையைக் கூட ஒழுங்காக அறியாத எனது இந்த ஏதோ ஒருசெயல் நமஸ்காரமாக ஏற்கப்படட்டும்.

சிவதம்பதி என்மீது கருணை கொண்டு பக்தனாக என்னை ஏற்று மங்களமான அந்தப்பேரானந்தம் பெறும் வகையில் எனது இந்தப் பணியை நமஸ்காரமாக ஏற்கட்டும்.

இந்த சிவானந்தம் ஏதோ ஒரு கணம் மின்னல் கீற்றாக உணரப்பட்டது. பின் நினைவில் அனுபவமாக அசைபோட அது இனித்தது. அது தொடர்ந்து பெருகினால் நல்லது எனப் பக்தனின் மனம் ஏங்குகிறது. அவ்வாறு நடைபெறுவது சாத்தியமா என ஐயம் எழுகிறது. அந்த அனுபவம் ஒரு வற்றாத நீர் ஊற்று. அதில் மூழ்கித் திளைத்து இன்புற அனுபவிக்க இயலும். என்று ஆசாரியர் விளக்குகிறார்.

गलन्ती शम्भो त्वच्चरित-सरितः किल्बिषरजो
दलन्ती धीकुल्यासरणिषु पतन्ती विजयताम्।
दिशन्ती संसारभ्रमण परितापोपशमनम्
वसन्ती मच्चेतो हृदभुवि शिवानन्दलहरी ॥ २ ॥

கலந்தீ ஶம்போ த்வச்சரித ஸரித: கில்பிஷரஜோ
தலந்தீ தீகுல்யாஸரணிஷு பதந்தீ விஜயதாம் ।
திஶந்தீ ஸம்ஸாரப்ப்ரமண பரிதாபோபஶமநம்
வஸந்தீ மச்சேதோ ஹ்ரதபுவி ஶிவாநந்தலஹரீ ॥ 2 ॥

சிவபெருமானே, மங்களமும் ஆனந்தமுமான உம்மை மங்களமும் ஆனந்தமும்பெற அணுகுகிறேன். மங்களம் எங்கு உள்ளது? எனத் தேடித்தேடி அலைந்து மங்களத்தின் தோற்றுவாய் நீரே என்பதனை உணர்ந்தேன். (சம்போ !) மங்களம் தோன்றுமிடமே!

அந்த சிவானந்தம் என்னுள் பாய்ந்து, பாழாயிருந்த பள்ளத்தை நிரப்பி விளங்கட்டும். (ஶிவாநந்த லஹரீ மச்சேதோ ஹ்ரதபுவி வஸந்தீ விஜயதாம்.) பரமமங்களமான அந்த ஆனந்தம்

- சிவாநந்தம். அது வெள்ளப்பெருக்காகி (லஹரீ) சிறிதும் பண்படாத புழுதி நிறைந்த ஆழ்ந்த மடுபோன்ற என் இதயத்தினுள் நிரம்பி வழியவேண்டும். அந்த வெள்ளம் நீடித்துப் பெருகவேண்டுமே ! உம் திரு நாமங்களைக் கேட்ட ருசியால் உமது சரித்திரத்தில் ஆர்வம் கொண்ட மனம் அதனையே திரும்பத்திரும்ப ஓய்வின்றி கேட்டது. உமது லீலைகளுக்கு எல்லையில்லை. உலகோடு நீர் ஒவ்வொரு நொடியும் விளையாடுகிறீர். அதனால் புத்தம் புதிதாகத் தொடர்ந்து சரித்திரங்கள் தோன்றுகின்றன. நான் அறிந்த கங்கை யமுனைபோன்று அது வற்றாத ஜீவநதி. அதிலிருந்து சிவ சரித்திரம் கேட்டதால் பெருகும் ஆனந்தமும் வற்றாத வெள்ளப்பெருக்காகத் தாழ்ந்த என் உள்ளம் நோக்கிப் பாய்ந்தோடிவருகிறது. (த்வச் சரிதஸரித: கலந்தீ) என்னை நோக்கிவருகிற வெள்ளப் பெருக்கைத் தடை செய்ய என் பாபமாகிய புழுதிமுட்டு எதிர்படுகிறது. அதனைத் தகர்த்து ஓடிவருகிறது. (கில்பிஷ ரஜ: தளந்தீ.) என் சித்தம் ஆழ்ந்த மடுதான். எனினும் என் அறிவு ஸங்கல்பமும் விகல்பமும் நிர்ணயமும் புகுத்தி, வெள்ளப்பெருக்கைச் சிறு சிறு வாய்க்கால்களாகப் பிரித்து எங்கோ கொண்டு செல்ல முற்படுகிறது. அத்தனைச் சிறு வடிகால்களையும் நிரப்பி அவற்றை மூழ்கடித்து என் சித்தமடுவை நோக்கி வெள்ளம் பாய்கிறது. (தீகுல்யா ஸரணிஷு பதந்தீ) அந்த குளிர்ந்த வெள்ளம் பிறப்பு இறப்பு ஸுகம் துக்கம் விருப்பம் வெறுப்பு என்று சுற்றிச்சுற்றி அலைக்கழிக்க முற்படுகிற ஸம்ஸாரச் சுழலால் ஏற்பட்டதாபத்தை அகற்றிச் சுழலால் என் சித்த மடு மேடிடாமல் தடுத்து நல் வழி காட்டுகிறது. (ஸம்ஸாரப் ப்ரமண பரிதாபோப ஶமநம் திஶந்தீ)

உமது திவ்ய சரிதமெனும் பெருநதியிலிருந்து என் சித்தமாகிய மடுவை அடைய வழிவகுத்துக் கொண்ட அந்த ஆனந்த வெள்ளப்பெருக்கு, வழியில் தடுத்த பாபமாகிய மண் முட்டைக் கரைத்து, அறிவு காட்டிய சிற்றின்பவழியில் சிதறாமல் ஸம்ஸாரத்தீயால் ஆவியாகாமல் அத்தீயை அணைத்து என் சித்தமெனும் மடுவில் நிரம்பித்தேங்கி நின்று அங்கேயே துலங்குகிறது.

சிவானந்த லஹரீ என்ற இந் நூலின் பெயர் இந்த சுலோகத்தின் மூலம் வெளியாகிறது.

சித்தமடுவில் நிரம்பிய சிவானந்த வெள்ளத்தினூடே ஆனந்தவடிவினரான சிவபெருமான் காட்சிதருகிறார்.

त्रयीवेद्यं हृद्यं त्रिपुरहरमाद्यं त्रिनयनम्
जटाभारोदारं चलदुरगहारं मृगधरम्।
महादेवं देवं मयि सदयभावं पशुपतिम्
चिदालम्बं (नन्दं) सांबं शिवमतिविडम्बं हृदि भजे ॥ ३ ॥

த்ரயீவேத்யம் ஹ்ருத்யம் த்ரிபுரஹர மாத்யம் த்ரிநயநம்
ஜடா பாரோதாரம் சலதுரகஹாரம் ம்ருகதரம் ।
மஹாதேவம் தேவம் மயி ஸதயபாவம் பஶுபதிம்
சிதாலம்பம் (நந்தம்) ஸாம்பம் ஶிவமதிவிடம்பம் ஹ்ருதி பஜே ॥ 3

(ஸாம்பம் ஶிவம் ஹ்ருதி பஜே) அம்பிகையுடன் கூடிய சிவபெருமானை இதயத்தில் வழிபடுகிறேன். அவர் இதயத்திற்கினியவர் (ஹ்ருத்யம்) இதயத்தில் குடி கொண்டமையால் அவரை முழுதும் தெரிந்து புரிந்து உணர்ந்து கொண்டதாகாது. அவர் எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டவர். வேதமே நான் அவரை அறிவேன் "வேதாஹமேதம்" என்று கூறுகிறது. வேதம் தான் ஒருவாறு உணர்ந்திருந்தும் சொல்லால் அவரைக் குறிப்பிட இயலாமையைத் தெரிவிக்கிறது. (த்ரயீவேத்யம்) புராணங்களோ திரிபுராஸுரனையும், அவன் வாழ்ந்த அவனுக்கு அரணாயிருந்த முப்புரங்களையும் அழித்தவர் எனக்கூறும். (த்ரிபுரஹரம்). தேவர்களோ அவரை எல்லோருக்கும் மூத்தவர் என்கின்றனர். (ஆத்யம்) எல்லாம் அவருக்கு பின்னரே! அவருக்கு முன் எவருமில்லை.

அவருக்கு மூன்று கண்கள். விச்சோடியாக நெற்றியில் குறுக்கே ஒரு கண். சூரியன் வலது கண். சந்திரன் இடது கண். அக்கினி நெற்றிக் கண். (த்ரிநயநம்) ஸாம்பரானதால் தேவிக்கும் இதே மூன்று கண்கள். "த்ரிநயநா". மனத்தில் நிலைத்து என்றும் நினைவிற்கு வரும்படி அழகிய கனத்த செஞ்சடையான். (ஜடாபாரோதாரம்) மார்பில் தொங்கி ஆடுகின்ற பாம்பு ஹாரம். (சலத் உரக ஹாரம்) தன் வாலைத் தன் கழுத்தில் சுற்றிப் படத்தைத் தொங்கட்டானாக்கி மார்பில் தொங்குவதில் ஸர்பராஜனுக்குப்

பெரு மகிழ்ச்சி. தாருகாவனத்தில் தன்னை எதிர்க்க அபிசார முறையில் வெளிப்பட்ட மாயமான், இவரைக் கண்டதும் மாயை அகல, அடங்கி விரல் நுனியில் நின்று பகவானின் கருணை வடிகிற முகத்தை உற்று நோக்குகிறது. (ம்ருகதரம்). ''எங்களிடையே மஹான் இவரே'' எனத் தேவர்கள் இவரை வழிபடுவர். (மஹாதேவம்). இவர் தன் ஒளியால் தானே ஒளிர்பவர். மற்ற ஒளிகள் இவரை விளக்கப்பயன்படாது. அதனால் இவர் தேவர். (தேவம்) மற்றதன் உதவியின்றித் தானே பிரகாசிப்பவர். ஸ்வயம் பிரகாசர். இவர் என்னிடம் மிகவும் பரிவுகாட்டுபவர் (மயிஸதயபாவம்) கயிற்றால் தரியில் கட்டப்பட்ட பசுபோல் தன்னிச்சைப்படி இயங்க இயலாத உயிரினத்தின் ஒரே நாதன். (பஶுபதிம்) வினை எனும் தளையின் பிணைப்பால் பசுவான ஜீவன் தன் விடுதலைக்கு நாடும் ஒரே தேவன் பசுபதி. பசுபாசவிமோசனத்தில் தேவிக்கும் பங்கு உண்டு. (பஶுபாஶவிமோசநீ). பிரும்மா முதல் புழு வரை அனைவரும் ஸம்ஸாரபாசத்தால் பிணைக்கப்பட்டவரே.

பேராற்றலும் பேரறிவும் பேரொளியுமாக விளக்கம் பெறுவது சித்சக்தியாகும். சக்தி தனக்கொரு ஆதாரமின்றி செயல்படாது. ஆதாரமில்லையேல் செயலற்றிருக்கும். அந்த சித் சக்திக்கும் ஆதாரமாக பிடிப்பாக இருப்பவர். (சிதாலம்பம்). சிற்றறிவுகளனைத்திற்கும் மூலம் பேரறிவான சித்சக்தி. கண்ணால் பார்க்கிறேன் எனும்போது பார்வை என்ற அறிவு கண்ணால் பெற்றது. அது சிற்றறிவு. இப்படிப் பல சிற்றறிவுகள் உண்டு. இவை அனைத்தும் பிறவியுடன் கூடப் பெற்ற சுய அறிவின் பல கிளைகள். தனி ஒருவனின் தனித்த சுய அறிவின் தொகை ஸமஷ்டி, உலகெங்கிலும் அப்பாலும் பரவியிருப்பது மூலமான சித்சக்தி. அதற்குப் பிடிப்பாக இருப்பவர் மஹாதேவன். சித்தும் ஆனந்தமாயுமிருப்பவரும் கூட. (சிதானந்தம்) இன்னார், இத்தகையவர் இவ்வண்ணத்தினர் எனக் குறிப்பிட முடியாதபடி கற்பனையாலும் நிரூபிக்க முடியாதவர், நொடியில் பலவாறாகத் தோன்றுபவர், பெரு நடிகர் - நடிகர்களின் அரசரல்லவா? அவர் நடராஜர். (அதிவிடம்பம்) இவரை இதயத்தில் மானஸிகமாக வழிபடுகிறேன் (ஹ்ருதிபஜே) சித்தத்தில் துலங்குபவரை சித்தத்தில் தான் வழிபடவேண்டும். சித்தத்தில் நின்று தியோ யோ ந: ப்ரசோதயாத் என அறிவைத் தூண்டுபவராக உணர்ந்து வழிபடுகிறேன்.

வழிபட மற்றும் பல தேவதைகள் உள்ளனரே ! சிவபெருமானிடம் ஏன் இந்தத் தனித்த ஈடுபாடு? ஆசாரியர் விளக்குகிருர்.

सहस्रं वर्तन्ते जगति विबुधाः क्षुद्रफलदाः
न मन्ये स्वप्ने वा तदनुसरणं तत्कृतफलम्।
हरि ब्रह्मादीनामपि निकटभाजा मसुलभम्
चिरं याचे शम्भो शिव तव पदाम्भोज भजनम्॥ ४॥

ஸஹஸ்ரம் வர்தந்தே ஜகதி விபுதா: க்ஷுத்ர பலதா:
ந மந்யே ஸ்வப்நே வா ததநுஸரணம் தத்க்ருதபலம் ।
ஹரி ப்ரம்ஹாதீநாமபி நிகடபாஜா மஸுலபம்
சிரம் யாசே ஶம்ப்போ ஶிவ தவ பதாம்ப்போஜ பஜநம் ॥ 4॥

நமது விருப்பத்திற்குகந்த பொருள் எண்ணற்றது. அவ்விருப்பத்தைத் தரும் ஆற்றல் பெற்ற தேவர்களும் எண்ணற்றவர். நாம் விரும்பிய பொருள் அனைத்தும் மிக அற்பமே. எதனுலும் நிறைவு கிட்டாது. ஒன்றைப் பெற்றதும் நாட்டமடங்காமல் வேருென்றை நாடுவோம். நிறைவு தராததனைத்தும் அற்பம் தானே ! அற்பத்தை வழங்குபவரும் அற்பரே ! அற்பப்பலன்களைத் தந்தே நம்மை மயக்குகிற தேவர்கள் ஆயிரக் கணக்கில் உள்ளனர் (ஜகதி க்ஷுத்ர பலதா: விபுதா: ஸஹஸ்ரம் வர்தந்தே) அவர்கள் இருக்கட்டும். அவர்களை வழிபடுவதையோ வழிபட்டதன் பயனுகப்பெற்ற நன்மையையோ வாழ்வின் பெரும் பயனுக நான் நினைக்க வில்லை. பொருட்படுத்தத்தக்க பலன் ஏதும் அதனுல் கிட்ட வில்லை. (ந மந்யே ஸ்வப்நேவா ததநுஸரணம் தத்க்ருதபலம்) அதனுல் அவர்களைக் கனவிலும் வழிபடமாட்டேன். அதனுல் பெறுகிற பயனையும் ஒரு பொருட்டாகக் கருதமாட்டேன்.

அப்படியானுல் உன் வாழ்வின் குறிக்கோள் என்ன? என்ன வேண்டுவாய்? எனில், (ஶிவ) பரமேச்வர (ஶம்ப்போ) மங்களத்தின் தோற்றுவாயே ! உமது திரு வடித்தாமரைகளை வழிபடுதல் ஒன்றையே என்றென்றும், எத்தனை தாமதமானுலும், தொடர்ந்து வேண்டுவேன். எனக்கு அந்த வாய்ப்பொன்றே போதும் (தவ பதாம்ப்போஜபஜனம் சிரம் யாசே !) அது எளிதானது தானே ! திருவடிகள் என்னைத் தம் முடையவனுக ஏற்கவேண்டும்.

நான் வாயால் அவற்றை அடைந்தால் போதாது. நான் பகவானுடையவன் (பாகவதன்) என அவை என்னை ஏற்கவேண்டுமே ! நான் அவற்றின் வழிபட, அவை எனக்கு வழி காட்டவேண்டுமே ! அது எளிதல்லவே !. இன்னும் ஹரியும் பிரும்மாவும் சிவபெருமானது அணுக்கத் தொண்டு புரிபவராயிருந்தும் திருவடித்துணை அவர்களுக்கு எளிதில் கிட்டியதாகத் தெரியவில்லையே ! பறவையும் பன்றியுமாகியும் (குறுக்கேவளர்ந்த பிராணிவடிவம் ஏற்றும் தேவத்தன்மை இழந்தும்) பேரொளியின் அடிமுடி காணாத நிலை இன்று முள்ளதே! (ஹரிப்ரம்ஹாதீநாம் நிகடபாஜாம் அபி அஸுலபம்.) சிங்கத்தைக் காணவந்தவன் பூனையைக் கண்டு நிறைவடைய மாட்டான். சிவபெருமானின் வழிபாடு ஒன்றே வாழ்வின் பரமலக்ஷ்யம். அதனால் மற்ற தேவர்களை வழிபட மனம் இடம் கொடுக்காது. தாமரை மகரந்தத்தின் ருசிகண்டவண்டு நீர் முள்ளிப்பூ வைக்கண்ணெடுத்தும் பாராது. "சிவனொடொக்கும் தெய்வம் தேடினும் இல்லை. அவனோடொப்பார் இங்கு யாவரும் இல்லை." (திருமந்திரம்)

தேவர் அனைவரும் பரம்பொருளிடமிருந்து வெளியானவர். படைப்பு காப்பு லயம் மழை காற்று வெயில் என்ற உலக வாழ்வுப்பணிகளில் சிறு சிறு பங்குகளை ஆற்றுவதற்கான அதிகாரத்தைப் பரம்பொருளிடமிருந்து பெற்றவர். உலகப்பணி சீராக அமைய, அது மக்களுக்கு அனு கூலமாக அமைய, அவர்களை வழிபடுவது அவசியமாகிறது. அவர்களை வழிபடுவதும் இறுதியில் பரம்பொருளின் வழிபாடாகிறது. ஆனால் சுயநலனை முன்னிட்டு, சிறு சிறு பலன்களை நாடி இவர்களை வழிபடலாமே. எளிதில் பலன் கிட்டுமே ! இவற்றிற்காகப் பெருந்தேவரான மஹாதேவரை வழிபடுவது அவசியமில்லையே என்றொரு கருத்துண்டு. அளவிற்குட்பட்ட சக்திபெற்ற இந்திரன் அக்னி முதலானோர் அளவிற்குட்பட்ட இம்மைக் குரிய சிறு நலன்களை மட்டுமே தருவர். சிறு நலன்களைப் பெறுவதால் அவா அடங்காது. அற்ப ஆசைகள் மேலும் மேலும் கிளர்ந்தெழும். வாழ்வில் நிறைவு அமையாது. அந்நிறைவைத்தருபவர் பூர்ணரான சிவபெருமான் ஒருவரே. பூர்ண நிலையைப் பெற்றதும் சிறு சிறு அவா எழாது. ஏக்கமும் துயரமும் நேராது. அற்ப ஆசைகளுக்குக் குறுக்கு வழி நாடாமல் வாழ்வின் பெருங்குறிக்கோளாகிய நிறைவையும்

அமைதியையும் விரும்புபவன் எல்லா நலன்களின் தோற்று வாயான சம்புவையே வழிபடுவான்.

மற்ற தேவர்களின் வழிபாடு பயனற்றது. அந்த தேவர்களே தன்னலம் பெற சிவபெருமானை வழிபடுகின்றனர். ஆனல் சிவபெருமானை வழிபடுவதும் எளிதாயில்லை. என்ன செய்வது? அவர் அருளால் அவர் தாள் பணியலாம். அவர் தாள்பணிய அவரையே வேண்டலாம் என்கிறுர் ஆசாரியர்.

स्मृतौ शास्त्रे वैद्ये शकुनकवितागानफणितौ
पुराणे मन्त्रे वा स्तुतिनटन हास्येष्वचतुरः ।
कथं राज्ञां प्रीतिर्भवति मयि कोऽहं पशुपते
पशुं मां सर्वज्ञ प्रथित कृपया पालय विभो ॥ ५ ॥

ஸ்ம்ருதௌ ஶாஸ்த்ரே வைத்யே ஶகுந கவிதா காந பணிதௌ
புராணே மந்த்ரே வா ஸ்துதிநடந ஹாஸ்யேஷ்வசதுர: ।
கதம் ராஜ்ஞாம் ப்ரீதிர் பவதி மயி கோऽஹம் பஶுபதே
பஶும் மாம் ஸர்வஜ்ஞ ப்ரதித க்ருபயா பாலய விபோ॥ 5 ॥

நான் பசு. செய்யத்தக்கதையும் தகாததையும் உணராமல் வினைப்பிணைப்பில் சிக்கிய அறிவிலி. நீரோ பசுக்களிடம் பரிவுகொண்டு நல்வழிப்படுத்திக்காப்பவர். (பஶுபதே !) எங்கும் நீக்கமற நிறைந்துள்ளவர். (விபோ) எங்குமுள்ள வரானதால் என்னைக் காக்க என்னைத் தேடிவர வேண்டியதில்லை. நான் வேண்டியபின் தான் உமக்கு என்துயரம் தெரியும் என்ற நிலையுமில்லை. எல்லா மறிந்தவர் நீர். (ஸர்வஜ்ஞ) என்னைப் பொருட்படுத்திக் காக்க உலகில் எவருமில்லை. அவர்கள் என்னைப் பொருட்படுத்த ஸ்மிருதி முதலிய தர்ம சாஸ்திரத்திலோ (ஸ்ம்ருதௌ) மற்ற தொரு சாஸ்திரத்திலோ (ஶாஸ்த்ரே) வைத்யத்திலோ (வைத்யே) சகுன சாஸ்திரத்திலோ கவிதையிலோ கானத்திலோ பேச்சிலோ (ஶகுந - கவிதா - காந -பணிதௌ) புராணத்திலோ (புராணே) துதிப்பதிலோ நடிப் பதிலோ சிரிக்கவைப்பதிலோ (ஸ்துதி - நடன - ஹாஸ்யேஷு வா) நான் சிறிதும் திறமையில்லாதவன். (அசதுர:) பெரியமனிதர்களுக்கு என்னிடம் - என்னைக்காக்க ஆர்வம் எப்படி ஏற்படும்? (ராஜ்ஞாம் மயிகதம் ப்ரீதிர்பவதி?) அதனல் அவர்களிடம் கோரிப்பயனில்லை. என்னைப் பொருட்டாகக்

கொள்ள மாட்டார். நீர் ஒருவரே காப்பவர் எனப் புகழ்பெற்றவர். (ப்ரதித) அதனால் பரிவுடன் காப்பீர். (க்ருபயா பாலய).

ஆய்ந்தறிந்து புரிந்து கொண்டு உணர்ந்து செயல்படு ! மூடநம்பிக்கை பயனற்றது எனப்பலர் கூறுவர். சிலவற்றைத் தான் ஆராயலாம். யுக்தி தர்க்கம் விசாரம் என்று பகுத்துப் பார்க்கலாம். இது இதுவா? அதுவா? என்ற ஐயத்தை விலக்க ஆராய்தல் பயன்படும். உணர்ந்து அனுபவித்து வருகிற பொருளை ஆராய்வது அறியாமையாகும்.

**घटो वा मृत्पिण्डोऽप्यणुरपि च धूमोऽग्निरचलः**
**पटो वा तन्तुर्वा परिहरति किं घोरशमनम्।**
**वृथा कण्ठक्षोभं वहसि तरसा तर्कवचसा**
**पदाम्भोजं शम्भो र्भज परमसौख्यं व्रज सुधीः ॥ ६ ॥**

கடோ வா ம்ருத்பிண்டோப்யணுரபி ச தூமோக்நி ரசல:
படோ வா தந்துர்வா பரிஹரதி கிம் கோரஶமநம் ।
வ்ருதா கண்டக்ஷோபம் வஹஸி தரஸா தர்கவசஸா
பதாம்ப்போஜம் ஶம்ப்போர்ப்பஜ பரமஸௌக்ய்யம் வ்ரஜ ஸுதீ: ॥ 6 ॥

ஒருகுடத்தைக் கண்டவன் அதனை ஆராயப் புகுந்தான். இது மண்ணால் ஆனது. அதனால் மண்ணே. குடம் என்பது பொய். குடமென்ற நிலையே மெய், மண் என்பது பொய். குடத்தால் நீர் கொணரலாம். மண்ணால் இயலாது. இது நீர் கொணர்கிறது. குடம் அணுவின் சேர்க்கை. அதனால் அணுவே. இது அணுவல்ல. அணுவாயின் புலப்படாது. க்கடோ வா ம்ருத் பிண்டோபி, அணுரபிச) மலையில் புகை. மலை புகையாது. நெருப்பின்றிப்புகையாது. நெருப்பைக்காணோம். நெருப்பில் இருந்து வருகிற புகை நெருப்பா, நெருப்பிலிருந்து வேறுபட்டதா? நெருப்பே ! நெருப்பின்றிப் புகையாது. புகை நெருப்பல்ல - சுடவில்லையே? கருமை நெருப்புடையதல்ல (தூமோऽக்நி: அசல: )

துணி நூலைக்காட்டிலும் வேறுபட்டதல்ல. நூலே துணி. துணியால் மறைக்கமுடியும். நூலால் கட்டமுடியும். துணியும் நூலும் ஒரே பயன் தருபவையல்ல. வெவ்வேறே ! (படோவா தந்துர்வா)

இவ்வாறு வீண் தர்க்கம் செய்வது தொண்டை புண்படப் பயன்படும். முடிவற்ற இவ்வாதத்தால் கொடிய மரணத்திலிருந்து மீளமுடியுமா? (கோரஸமநம் கிம் பரிஹரதி? தரஸா தர்கவசஸா வ்ருதா கண்ட்டக்ஷோபம் வஹஸி?) நீ அறிவிலியல்ல. (ஸுதீ:) நல்லறிவுள்ளவன். நல்வழியில் செல்கிற பண்பு உன் அறிவிற்கு உண்டு. அதனை வீண் விவாதத்தில் செலவிடாதே. பல்லாண்டுகாலமாக பலரது அனுபவத்தில் கண்ட பரமசுகமடையும் வழி ஒன்றுண்டு. மங்களத்தின் உற்பத்தியிடமாகிய சம்புவின் திருவடித் தாமரைகளை வழிபடுவாய் (பரமஸௌக்யம் ஶம்போ: பதாம் போஜம் வ்ரஜ)

பகவானை வழிபடுவதில் எளியமுறைகள் உண்டு. அதில் முதலாவது, அவரையே சரணடைந்து குருவாக வழி காட்டியாக, வழியில் அழைத்துச் செல்பவராக, கட்டுப் படாததைக் கட்டுப் படுத்துபவராக இருக்க வேண்டுவது.

**मनस्ते पादाब्जे निवसतु वचः स्तोत्र फणितौ**
**करौ चाभ्यर्चायां श्रुतिरपि कथाकर्णन विधौ।**
**तव ध्याने बुद्धि र्नयन युगलं मूर्ति विभवे**
**परग्रन्थान् कैर्वा परमशिव जाने परमतः ॥ ७ ॥**

மநஸ்தே பாதாப்ஜே நிவஸது வச: ஸ்தோத்ர பணிதௌ
கரௌ சாப்யர்சாயாம் ஶ்ருதிரபி கதாகர்ணந விதௌ ।
தவ த்த்யாநே புத்த்திர்நயந யுகலம் மூர்தி விபவே
பரக்ரந்த்தாந் கைர்வா பரமஶிவ ஜாநே பரமத: ॥ 7 ॥

சிவமான பொருள்கள் பல. சிவமானதற்கும் சிவத்தன்மை தருகிற சிவம் இவர். மேலானவரும் அப்பாற்பட்டவரும் முக்கியமானவருமானதால் பரமர். அவரையே வேண்டுகிறேன். (பரமஶிவ). என் மனம் உம் திருவடித்தாமரையில் குடிபுகட்டும். நறுமணமும் மென்மையும் அழகும் கவர்ச்சியும் கொண்டவையாதலால், என் மனமும் அத்தன்மைகளால் கவரப்படுமாகையால், என் மனத்திற்கேற்ற இடம் உம் திருவடிகளே! எனினும் மகரந்தத்திடம் தேனீக்குத் தானே ஈர்ப்பு உண்டு. அதுபோல் என்மனமும் திருவடித்தாமரையைப்பற்றும் என்ற எதிர்பார்க்க இயலவில்லை. அதனால் நீரே தேனீயைத்

தேனில் முக்குவது போல் என்மனத்தை திருவடிகளில் குடிபுகும்படி வலியவந்தாட்கொள்வீர். (மநஸ்தே பாதாப்ஜே நிவஸது.) உம்மைத் துதிப்பதிலும் உம்மைப்பற்றிப் பரக்கபேசுவதிலும் என் வாக்கு ஈடுபடட்டும் (வச: ஸ்தோத்ரபணிதௌ நிவஸது). மனமும் வாக்கும் ஈடுபட்டதும் மற்ற அவயவங்களும் தானே வழிபடமுன்வரும். எனினும் அவ்வகையிலும் உம் உதவிதேவை. கைகள் உமக்குப் பணிபுரிவதில் ஈடுபடட்டும். (கரௌ அப்ப்யர்சாயாம் ச) காது உம் கதையைக் கேட்பதிலும் (ஶ்ருதி: அபி கதா - ஆகர்ணன விதௌ) அறிவு உம்மை இதயத்தில் தாங்கித் தியானிப்பதிலும் (தவத்த்யாநே புத்த்தி:) இருகண்களும் உம் உருவ அழகைக் கண்டு மகிழ்வதிலும் (நயன யுகலம் மூர்த்திவிபவே) ஈடுபடட்டும். அப்படி மனமும் வாக்கும் உடலும் கருத்தூன்றிப் பதிந்து விட்டால் பல்வேறு நூல்களை ஆராய்வதற்கு வாய்ப்பேது?

வீணேதர்க்கம் செய்யாதே! ஆராயாதே என்று மனத்தைத் தடுத்தால் அது நிற்காது. மனத்தைப் பறிக்கும் ஒன்றை அதற்குப் புகலிடமாகக் காட்டி அதில் அதனை ஈடுபடச் செய்தால், அதன்பின் நூலைப்படிக்கவோ கேட்கவோ வாதிடவோ வாய்ப்பில்லை. மனமோ வாக்கோ உடலோ உம்மிடம் ஈடுபாடு கொண்டபின் பிறநூல்களை எங்கே அறியப்போகிறேன்? (அத: பரம் கைர்வா பரக்ர ந்தான் ஜாநே!)

சிறப்பு மிக்கதென ஒன்றைக் காண்டால் மனம் பற்றும். தகாததைத் தக்கதெனக் கொள்ளும் அறியாமை அதன் இயல்பு. இந்த அறியாமையும் அவர் அருளால் தான் விலகும். அறியாமை விலக வேண்டுவோம் என வழிகாட்டுகிறார் ஆசாரியர்.

यथा बुद्धिश्शुक्तौ रजत मिति काचाश्मनि मणिः
जले पैष्टे क्षीरं भवति मृगतृष्णासु सलिलम्।
तथा देव भ्रान्त्या भजति भवदन्यं जडजनो
महादेवेशं त्वां मनसि च न मत्वा पशुपते ॥ ८ ॥

யதா புத்திஶ் ஶுக்தௌ ரஜத மிதி காசாஶ்மநி மணி:
ஜலே பைஷ்டே க்ஷீரம் பவதி ம்ருகத்ருஷ்ணாஸு ஸலிலம்।
ததா தேவ ப்ப்ராந்த்யா பஜதி பவதந்யம் ஜடஜநோ
மஹாதேவேஶம் த்வாம் மநஸி ச ந மத்வா பஶுபதே ॥ 8 ॥

பெருந்தேவனே ! தேவர்களை விடப்பெரியவரே ! (மஹாதேவ பஶுபதே!) நீரோ பசுபதி. பசுவின் தன்மை அறிவீர். புல்லேந்தித் தன்னைவெட்டுப்பாறைக்கு இட்டுச் செல்பவனை வேண்டியவன் என்ற பிரமையால் தானே வலிய முழுமனத்துடன் ஆடு பின் தொடரும். கையில் குச்சிகொண்டு வழிப்படுத்துகிற இடையனைக் கொலைகாரனாக நினைத்து ஒதுங்கி ஓடும். மனிதனுக்கும் அதே பசுநிலைதான். சிப்பியில் வெள்ளி யென்று மதிப்பு, கண்ணாடித்துண்டில் ரத்னமென்ற மதிப்பு. நீரில் கரைத்த மாவில் பால் என்ற மதிப்பு. கானல் நீரில் அருவிநீர் என்ற மதிப்பு. (சுக்தௌ ரஜதமிதி, காசாஶ்மநி மணி: இதி, பைஷ்டே க்ஷீரம் இதி, ம்ருகத்ருஷ்ணாரஸே ஸலிலம் இதி புத்திர் யதா) இது எப்படி பிரமையோ அதுபோல் உம்மைக் காட்டிலும் வேறுபட்டவரைத் தெய்வம் என்று மதிப்பதும், உம்மைத் தெய்வமென மதிக்காதிருப்பதும் பிரமையால் தான் - (ஈஶம் த்வாம் மநஸி தேவம் ந மத்வா, பவதந்யம் தேவப்ராந்தயா ஜடஜநோ பஜதி). அறிவில்லாதவன் அப்படிச் செய்வது இயல்பே. அவன் பசு. நீர் பசுபதி. வழிகாட்டுவது உம்கடமை.

பரமேசுவரரை வழிபடுவது மிக எளிது, சாதனங்கள் கிட்டாவிடில் குறையேதுமில்லை. எளிய வழியிருக்கிறது. ஸாதனம்தேடி அலைபவன் முட்டாள், என்கிறார் ஆசாரியர்.

गभीरे कासारे विशति विजने घोरविपिने
विशाले शैले च भ्रमति कुसुमार्थं जडमतिः ।
समर्प्यैकं चेतस्सरसिजं उमानाथ भवते
सुखेनावस्थातुं जन इह न जानाति किमहो ॥ ९ ॥

கபீரே காஸாரே விஶதி விஜநே கோரவிபிநே
விஶாலே ஶைலே ச ப்ரமதி குஸுமார்த்தம் ஜடமதி: ।
ஸமர்ப்யைகம் சேதஸ்ஸரஸிஜம் உமாநாத பவதே
ஸுகேநாவஸ்த்தாதும் ஜந இஹ ந ஜாநாதி கிமஹோ ॥ 9 ॥

பூஜைக்குப் பூ மிக அவசியம். அருகில் கிட்டவில்லை. அதோ ஆழ்ந்த மடுவில் நடுவில் தாமரை உள்ளது. உடன் அந்த அறிவு தடித்துப்போன மனிதன் ஆழ்ந்த மடுவினுள் இறங்குகிறான். அதில் மூழ்கித் திணறிப் பூவை நெருங்க இயலாமல் துயருறுகிறான். (ஜடமதி: குஸுமார்த்தம் கபீரே

**காஸாரே விஶதி.)** *பூவைப்பறிக்க முடியாமல் அருகிலுள்ள மனித ஸஞ்சாரமற்று விலங்குகளால் பயங்கரமான காட்டினுள் நுழைகிறான்.* **(விஜநே கோர விபிநே விஶதி)** *அல்லது எல்லை காணாத மலையுச்சியில் அலைகிறான்.* **(விஶாலே ஶைலே ச ப்ரமதி).** *ஆனால் கையில் வெண்ணெய்யை வைத்துக் கொண்டு நெய்க்காக ஊரெங்கும் அலைபவன் போல் அவனிடமுள்ள அரும் புஷ்பத்தை அவன் உணரவில்லை.* **(உமாநாத !)** *உமையின் நாதனே! அவன் சித்தமாகிற ஓடையில் மலர்ந்துள்ள பக்தி பாவம் எனும் ஒரே தாமரையை - உமக்கு அளித்து ஸுகமாக, அலையாமல் ஓரிடத்தில் அமர்ந்திருக்க அந்த ஜடன் அறிந்தானில்லையே!* **(பவதே ஏகம் சேதஸ்ஸரஸிஜம் ஸமர்ப்ய ஸுகேந அவஸ்த்தாதும் இஹ ஜந: நஜாநாதி அஹோ)** *பக்தியால் அவன் சித்தமே மலர்ந்த தாமரையாகியுள்ளது. அதனையே அவன் அர்ப்பணம் செய்யலாமே!*

இறைவ ! *''எங்கேனும் யாதாகிப்பிறந்திடினும் தன் அடியார்க்கு இங்கே என்றருள் புரியும் எம்பெருமான்'' நீர். ''எந்தவுடலேனும் எடுத்த உடல் நல்லதென்று சிந்தை செய்ய'' நீரே வழிகாட்டவேண்டும். ''புழுவாய்பிறக்கினும் புண்ணியா! உம் அடி என் மனத்தே வழுவாதிருக்க வரம் தரவேண்டும்''. என சம்பந்தரும் தாயுமானவரும் திருநாவுக்கரசரும் வேண்டி நிற்பர். ஆசாரியரும் அதையே கேட்கிறார்.*

**नरत्वं देवत्वं नगवनमृगत्वं मशकता**
**पशुत्वं कीटत्वं भवतु विहगत्वादि जननम्।**
**सदा त्वत्पादाब्ज स्मरणपरमानन्द लहरी-**
**विहारासक्तं चेद्धृदयमिह किं तेन वपुषा॥ १० ॥**

**நரத்வம் தேவத்வம் நகவநம்ருகத்வம் மஶகதா**
**பஶுத்வம் கீடத்வம் பவது விஹகத்வாதி ஜநநம் ।**
**ஸதா த்வத்பாதாப்ஜ ஸ்மரணபரமாநந்த லஹரீ-**
**விஹாராஸக்தம் சே த்த்ருதயமிஹ கிம் தேந வபுஷா ॥ 10 ॥**

*மனிதப்பிறவியோ தேவநிலையோ மலைவாழ் விலங்கோ, காட்டுவாழ் விலங்கோ, கொசுவோ கால்நடையோ புழுவோ பறவையோ எப்பிறவி பெற்றாலும் உம் திருவடித் தாமரையின்*

நினைவில் பெறுகிற பரமானந்த வெள்ளப்பெருக்கில் விளையாடுவதில் ஈடுபடுவதாக என் இதயம் ஆகுமேயாயின் உடல் எதாயினும் அதனால் என்ன குறை? (நரத்வம்.... ஜநநம் பவது. மே ஹ்ருதயம் த்வத்பாதாப் ஜஸ்மரண பரமாநந்த லஹரீ விஹாராஸக்தம் சேத் இஹதேந வபுஷா கிம்?

மனிதனாகப் பிறந்தவனும் எந்தவர்ணத்தைச் சார்ந்தவன் என்றோ எந்த ஆசிரமத்தை ஏற்றவன் என்றோ சிந்திக்கத்தேவையில்லை.

वटुर्वा गेही वा यतिरपि जटी वा तदितरो
नरो वा यः कश्चिद्भवतु भव किं तेन भवति ।
यदीयं हृत्पद्मं यदि भवदधीनं पशुपते
तदीय स्त्वं शंभो भवसि भवभारं च वहसि ॥ ११ ॥

வடுர்வா கேஹீ வா யதிரபி ஜடீ வா ததிதரோ
நரோ வா ய: கஶ்சித்பவது பவ கிம் தேந பவதி ।
யதீயம் ஹ்ருத்பத்மம் யதி பவததீநம் பஶுபதே
ததீய ஸ்த்வம் ஶம்போ பவஸி பவபாரம் ச வஹஸி॥11॥

பசுபதியே ! சம்ப்புவே ! அவன் பிரும்மசாரியா? கிருஹஸ்தனா? துறவியா? சடையுடையவனா? மொட்டையனா? மனிதன் எவ்வாறேனும் இருக்கட்டும் - அதனால் என்ன நேரவிருக்கிறது? (பஶுபதே ! ஶம்போ ! வடுர்வா கேஹீ வா யதி:, அபி ஜடீ, ததிதரோ வா, நர: ய: கஶ்சித் பவது? கிம் தேந பவதி) நீர் தானே அவனை அந்நிலைக்கு உள்ளாக்கியவர். (பவ!) தோற்றுவிப்பவரே! நீர் அது எதனையும் பொருட்படுத்த மாட்டீர். அவனது உள்ளமாகிற தாமரை உமக்கு அடங்கியதாக ஆட்டுவித்தபடி ஆடுவதாக ஆகுமேயானால், (யதீயம் ஹ்ருத்பத்மம் பவததீனம் யதி,) நீர் அவனுடையவனாக ஆகிறீர். (த்வம் ததீயோ பவஸி) அவனது வாழ்வுச் சுமையையும் தாங்குகிறீர். (பவபாரம் ச வஹஸி) அவன் இதயத்தை உமது திருவடியில் வைத்ததும் நீர் அவனுடையவனாகி அவனை நல்வாழ்வு வாழத்தாங்குகிறீர்.

இறைவனை வழிபடவென்று, காடு மலை என ஏகாந்தத்தை நாடவேண்டாம். உனது மனமாகிய ஏகாந்தத்தில் அவருக்கிடம் கொடு. அதுவே பரமயோகம்.

गुहायां गेहे वा बहिरपि वने वाऽद्रिशिखरे
जले वा वह्नौ वा वसतु वसतेः किं वद फलम् ।
सदा यस्यैवान्तः करणमपि शंभो तव पदे
स्थितं चेद्योगोऽसौ स च परम योगी स च सुखी ॥ १२ ॥

குஹாயாம் கேஹே வா பஹிரபி வநே வாऽத்ரிஶிகரே
ஜலே வா வஹ்நௌ வா வஸது வஸதே: கிம் வத பலம் ।
ஸதா யஸ்யைவாந்த: கரண மபி ஶம்போ தவ பதே
ஸ்த்திதம் சேத் யோகோऽஸௌ ஸ ச பரம யோகீ ஸ ச ஸுகீ ॥ 12 ॥

குகையிலோ வீட்டினுள்ளோ வெட்ட வெளியிலோ காட்டிலோ மலை முகட்டிலோ வழிபடுமிடம் அமைத்துக் கொள்ளட்டும். (குஹாயாம் கேஹே வா பஹி: அபி வநே வா அத்ரிஶிகரே வா வஸது.) நீரிலோ நெருப்பிலோ இருந்து அவரை வழிபடட்டும். (ஜலேவா வஹ்நௌ வா வஸது) இறைவ ! (ஶம்போ) உமக்கு அவன் எந்த இடத்தில் தங்குமிடம் அமைத்தால் நல்லது? சொல்வீர். (வஸதே: கிம்பலம்? வத) அதனுல் என்ன என்னபலன்? தனித்து ஏதும் பலனிருப்பதாகத் தெரியவில்லை. அவனது உள்ளம் எப்போதும் உம் திருவடிகளில் பதிந்திருந்தால் அது தான் சிறந்த சேர்க்கை. (யோகம்) அவன் தான் சிறந்த யோகி (யஸ்ய அந்த: கரணம் ஸதா தவபதே ஸ்த்திதம் சேத் அஸௌ ஸ யோக: ஸ ச பரம யோகீ.) இறைவனிடம் உள்ளம் எப்போதும் நன்கு பதிந்திருந்தால் அது தான் ஸமாதி நிலை. அப்போது பெறுவது தான் துக்கக்கலப்பற்ற ஆனந்தம். அந்தயோகி அந்தப் பேரானந்தத்தை அனுபவிக்கிருன் (ஸ ச ஸுகீ).

ஈசனேடு உள்ளம் தான் இணையும். வெளிப் பொருளனைத்தும் இறைவனுடன் எப்போதும் கலந்ததே. உள்ளம் இணையாதவரை காடும் ஆறும் மலையும் இறைவனுடன் நம்மை இணைக்கமாட்டா. ஜலத்திலோ நெருப்பிலோ இருப்பதும் அங்கு அவரை ஆவாஹனம் செய்து வழிபடுவதும் உள்ளத்தினுள் ஈசனைக் கொள்ளாதவரை வீணே. உள்ளத்தில் ஈசனைப்பதித்துப்பழகவே காடும் நீரும் மற்றதும். அதுவே சதமல்ல. உள்ளத்தில் ஈசனைப் பதித்து உணர்ந்து பேரானந்தம் கொள்வாய் !

असारे संसारे निजभजन दूरे जडधिया
भ्रमन्तं मामन्धं परम कृपया पातु मुचितम्।
मदन्यः को दीन स्तव कृपण रक्षाति निपुणः
त्वदन्यः को वा मे त्रिजगति शरण्यः पशुपते ॥ १३ ॥

அஸாரே ஸம்ஸாரே நிஜபஜந தூரே ஜடதியா
ப்ரமந்தம் மாமந்தம் பரம க்ருபயா பாது முசிதம் ।
மதந்ய: கோ தீந ஸ்தவ க்ருபண ரக்ஷாதி நிபுண:
த்வதந்ய: கோ வா மே த்ரிஜகதி ஶரண்ய: பஶுபதே ॥ 13 ॥

ஈசன் நம் உள்ளத்தில் புக நாம் அவரிடம் சரணம் புகவேண்டும். ''வெளியுலகம் நம்மைக் காக்கும். வெளியுலகில் சுகமுள்ளது. அதை நாடிப்பெறலாம்'' என்ற எண்ணமிருக்கும் வரை ஈசனைச் சரணடையோம். வெளியில் சுகமில்லை, துக்கமுண்டு என்பதைப் பல பிறவிகளிலும், தொடர்ந்து இப்பிறவியிலும் உணர்ந்தும் அதிலுள்ள பற்று குறையவில்லை. அது சாரமற்றது என்ற எண்ணம் வர வில்லை. அது பரமனைப் பற்றி அறிவதைத் தடுப்பதும் கண் கூடு. கரடிப்பிடியாக நம்மைப் பிடித்துக் கொண்டிருக்கிற இந்த ஸம்ஸாரப்பற்று விலகவும் அவரிடம் தான் வேண்டிக் கொள்ளவேண்டும். நாமே நம் அறிவால் விலக்கிக் கொள்ள இயலாது. அதில் ருசிகண்ட அறிவு அதனைத் தவிர்க்க விடாது. இந்தப் பசு எண்ணம் நீங்கப் பசுபதியே ! உம்மை நாடுகிறேன். (பஶுபதே!) அக்கரை காண இயலாத கடல் போன்றது இந்த ஸம்ஸாரம் எனும் பிறப்பு - வாழ்வு - மறைவு என்ற சுழல். (அபாரே ஸம்ஸாரே !) உம்மை வழிபடுவதிலிருந்து தூர ஒதுங்கிநிற்கவைத்துள்ளது. (நிஜ - பஜந - தூரே.) அத்தனை கெட்டது என்று உணர்ந்த பின்னரும் நீ ஏன் தானே வலிவில் அதில் சிக்கிக் கொள்கிறாய் எனில் என் அறிவு தன்னியல்பை இழந்து பழக்கத்தால் ஜடமாகிவிட்டது. நன்கு பழக்கப்பட்ட ஒன்றைத் திரும்பத் திரும்பச் செய்யும் போது அறிவு பூர்வமான- கவனத்துடன் செயல்படுகிற அறிவாற்றல் மழுங்கிவிட்டது. அந்த ஜட அறிவால் எதிலும் முன்னேறாமல் பிரமையுடன் சுற்றிச்சுற்றி வருகிறேன். (ஜடதியாப்ப்ரமந்தம்). கண்ணிருந்தும் குருடன் நான். பழகிய தோஷம். அவ்வப்போது சீர்துக்கிக் கவனித்துச் செயல் படாதவன். (மாம் அந்த்தம்) என்னைக் காப்பாற்ற ஒரேவழி. ஒரு குருடன் பாழுங்கிணற்றில்

விழ இருக்கும் போது அருகிலிருப்பவன் எவனும் பரிவுடன் அவனைத் தடுத் தாட்கொள்வான். உமக்கும் இது தானே உசிதம்? உமது கருணை மிகமேலானது, தன்னலமற்றது. எதிர்பார் வையற்றது. (பரம க்ருபயா பாதும் உசிதம்) என்னைக் காக்கா விடில் அது தவறே. நீர் எளியவனுக்கு ஒரே புகலிடம். எளியவனைக் காப்பதில் மிகவும் நிபுணர் என்று புகழப் பெறுபவர். எளியவரில் எளியவன் நான் என்பதை நீரும் அறிவீர். மூவுலகமும் அறியும். என்னைத் தவிர தீனன் (எளியவன்) உமக்கு எங்குகிடைப்பான்? (தவ மதந்ய: கோ தீந:. ? த்வதந்ய: க்ருபணரக்ஷாதி நிபுண: த்ரிஜகதி கோவா?) உம்மைத்தவிர வேறு ஒருவரிருந்தால் கூறும். அவரிடம் செல்கிறேன்.

எளியவனைக் காப்பாற்றுகிற தகுதியும் கடமையும் கொண்டவரானதால் உம்மை அடைகிறேன்.

प्रभुस्त्वं दीनानां खलु परमबन्धुः पशुपते
प्रमुख्योऽहं तेषा मपि किमुत बन्धुत्व मनयोः ।
त्वयैव क्षन्तव्याः शिव मदपराधाश्च सकलाः
प्रयत्नात्कर्तव्यं मदवन मियं बन्धु सरणिः ॥ १४ ॥

ப்ரபு ஸ்த்வம் தீநாநாம் கலு பரமபந்து: பஶுபதே
ப்ரமுக்யோऽஹம் தேஷா மபி கிமுத பந்துத்வ மநயோ: ।
த்வயைவ க்ஷந்தவ்யா: ஶிவ மதபராதாஶ்ச ஸகலா:
ப்ரயத்நாத்கர்தவ்யம் மதவந மியம் பந்து ஸரணி: ॥ 14 ॥

(பஶுபதே !) பசுபதியே, நீரே எனக்கு உற்ருரும் உறவினரும். என்னைக் காக்கக் கடவீர். உமக்கே தெரியும். நீர் எல்லாம் வல்லவர். (த்வம் ப்ரபு:) ஏழை எளியவர்க்கு உள்ள ஒரே உறவினர் அல்லவா? (தீநாநாம் பரம பந்த்து:கலு?) ஒரு எதிர்பார்வையும் இன்றி மிகப்பரிவுடன் தானே ஆதரவுடன் அணைப்பவர். பரம பந்து. எளியவர்களிடையே தேர்ந் தெடுத்தால் முதலில் நிற்பவன் நான் தான். (அஹம் தேஷாம் ப்ரமுக்ய:) இந்த நம் இருவரிடையே உள்ள கிட்டிய உறவுமுறை பற்றிச் சொல்ல வேறென்ன இருக்கிறது? (அநயோ: பந்துத்வமபி கிம் உத?) குற்றம் காணில் சுற்றமில்லை. சுற்றம் காணில் குற்றம் தெரியாது. (சிவ!) பரமேச்வர ! பேரருளாளரே ! என் பிழைகளனைத்தையும் நீரே பொறுத்தருளவேண்டும். குற்றத்தைச் சுட்டிக்காட்டி வேறொருவரை நியாயம் வழங்க அனுப்பாதீர்.

நீரே என்மீதுள்ள குற்றப்பட்டியலை "பொறுத்துக் கொள்ளப்பட்டது" என முத்திரை குத்தித் தள்ளுபடி செய்து விடுவீர். (ஸகலா: மத் அபராதா: ச த்வயா ஏவ க்ஷந்தவ்யா:) முழுமுயற்சியுடன் கவனம் குறையாமல் இந்த என் பாதுகாப்பு செய்யப்பட்ட வேண்டும். (மத் அவநமிதம் ப்ரயத்நாத் கா்தவ்யம்) ஏனோ தானோ என்றல்ல. முழுப்பொறுப்புடன் செய்யத்தக்கது. சுற்றத்தாரிடம் எவரும் இதனை எதிர்பார்ப்பர். இதுவே உறவினர் கடமையும் முறையுமாகும் (இயம் பந்த்து ஸரணி:।)

ஈசனின் கிருபை செயலாற்றுவதற்கு இடையூறாக என் விதி குறுக்கிடலாம். தலைவிதியை மாற்றுவது விதியின் (பிரும்மாவின்) தலையைக்கிள்ளி எறிந்தவனுக்கு எளிதே.

उपेक्षा नो चेत् किन्न हरसि भवद् ध्यान विमुखाम्
दुराशा भूयिष्ठां विधि लिपि मशक्तो यदि भवान्।
शिरस्तद्वैधात्रं न नखलु सुवृत्तं पशुपते
कथं वा निर्यत्नं करनख मुखेनैव लुलितम्॥ १५॥

உபேக்ஷா நோ சேத் கிந்ந ஹரஸி பவத் த்யாந விமுகாம்
துராஶா பூயிஷ்ட்டாம் விதி லிபி மஶக்தோயதி பவாந் ।
ஶிர ஸ்தத்வைதாத்ரம் ந நகலு ஸுவ்ருத்தம் பஶுபதே
கதம் வா நிர்யத்நம் கரநக முகேநைவ லுலிதம் ॥ 15 ॥

(பஶுபதே!) இறைவ ! இத்தனை வேண்டியும் உம்மிடம் அசட்டை காண்கிறதோ என்று ஐயம் ஏற்படுகிறது. அசட்டை இல்லையேல் ஏன் என் தலையெழுத்தை மாற்ருதிருக்கிறீர். (உபேக்ஷா நோ சேத்விதிலிபிம் கிம் நஹரஸி) அது உம்மை நினைப்பதற்குக் கூடத் தடையாகி என்னைவேறு வழியில் திருப்பிவிடுகிறது. (பவத் த்த்யான விமுகாம்.) தலையெழுத்து உள்ளத்து வாஸனையாக அமர்ந்து கெட்டவற்றையே பெரும்பாலும் நாடச் செய்கிறது. (துராஶா பூயிஷ்ட்டாம்) என் தலையெழுத்து மாற்ற ஒண்ணாதது என்றும் அதற்கான திறமை உம்மிடம் இல்லை யென்றும் நினைக்கிறீரோ! (அஶக்தோ பவாந்யதி) உலகின் விதியை அவரவர் தலையில் எழுதி அவரவர் செய்த வினைக்குட்படுத்தி உலகைக் கட்டி ஆள்பவர் பிரும்மா எனும் விதாதா. கட்டுப்பாட்டை ஏற்படுத்தியவர். அவருக்கு ஐந்துதலைகள். கண் காணிக்க. எப்போதும் சுற்றிபார்ப்பதால் கழுத்தின் தசைகள் வலிவடைந்து இறுகி மழமழவென உருண்டு

நகத்தால் கிள்ளமுடியாத அளவு திரண்டகழுத்து. அது முயற்சியின்றி எளிதாக, சொகுசாக, கையின் ஒருவிரல் நகநுனியால் கிள்ளி எறியப்பட்டதே. கட்டை விரல் கழுத்தைச் சாய்த்ததும் ஆட்காட்டி விரல்நகநுனியைப் பதித்துக் கிள்ளியதும் எங்ஙனம்? (நிர்யத்னம் கரநகமுகேநைவ லூலிதம் கதம்?) எழுதியவர் கழுத்தையே கிள்ளியவருக்கு, அவர் எழுதிய எழுத்தை அழிப்பது இயலாததா?

என்றே செய்த ஒருகெட்ட செயல் அக்கணமே மறைந்து விட்டாலும் அதன் வினையுருவம் தொடர்கிறது. எல்லா வினைகளையும் ஒருங்கே ஒரே பிறவியில் அனுபவித்துத் தீர்க்க இயலாது. இன்று எடுத்துள்ள பிறவியில் இவ்வினையின் பலனை அனுபவிப்பதெனப் படைப்பவர் படைக்கும்போதே அவர் அவர் கணக்கில் (தலையில்) பதித்துத் தந்து விடுகிறார். வினையை மாற்றவோ வலிவிழக்கச் செய்யவோ பொதுவாக எந்த தெய்வ சக்தியும் குறுக்கிடுவதில்லை. ஆனால் வினையை வினையால் அறுக்கமுடியும். எல்லாத்தீவினைகளையும் சுட்டெரிக்கிற ஆற்றல் இறைவனை விட இறைவனின் திருவடிகளைப் பக்தியுடன் பற்றிச் சரண் புகுவதற்கு உண்டு. தான் என்ற அகந்தையும் தனதென்ற மமதையும் என்றும் அகலாதவை: இவ்விரண்டுமே வினைக்குரிய செயலைச் செய்தன, ஈசனைச் சரணடைந்ததும் நானும் அழிந்தது. எனதும் அழிந்தது. எல்லாம் அவருடையதாயிற்று. வினையை அனுபவிக்கிறவர் இல்லாததால் வினை பயனற்றுப் போய் விடுகிறது. அதனால் முன்வினையால் வந்த எளிமையே என்னை இறைவனிடம் கொண்டுசேர்த்தது. அதனால் வினைக் குட்படுத்திய பிரமனுடன் எனக்கு மோதல் இல்லை.

विरिंचि दीर्घायु र्भवतु भवता तत्परशिर-
श्चतुष्कं संरक्ष्यं स खलु भुवि दैन्यं लिखितवान्।
विचारः को वा मां विशद कृपया पाति शिव ते
कटाक्ष व्यापारः स्वयमपि च दीनावन परः ॥ १६ ॥

விரிஞ்சிர்-தீர்க்காயுர்-பவது பவதா தத்பரஶிரஶ்
சதுஷ்கம் ஸம்ரக்ஷ்யம் ஸ கலு புவி தைந்யம் லிகிதவாந் ।
விசார: கோ வா மாம் விஶத க்ருபயா பாதி ஶிவ தே
கடாக்ஷ வ்யாபார: ஸ்வயமபி ச தீநாவந பர: ॥ 16 ॥

படைப்பவர் நீண்ட ஆயுள் பெற்று வாழட்டும். (விரிஞ்சி: தீர்க்காயு: பவது). அவரது அகந்தைமமதையை அகற்றுவதற்காக ஒருதலையைக் கொய்தது போதும். மற்ற நான்கு தலைகளை உலகநன்மைக்காகக் காப்பது உமது பொறுப்பில் உள்ளதல்லவா? (தத் பர ஶிரஸ் சதுஷ்கம் பவதா ஸம்ரக்ஷ்யம் கலு) ஆனால் என்தலையில் அவர் ஏழ்மையால் இப்பிறப்பில் வாடும்படி எழுதிவிட்டாரல்லவா (ஸ: புவி தைன்யம் லிகிதவான் கலு?) அதனைப்பற்றி எனக்குக் கவலைப் பட்டு ஆவதொன்றுமில்லை. (விசார: கோவா? சிவ!) சிவபெருமானே! உமது கடைக்கண் பார்வை இயல்பில் எளியவனைக் காப்பதில் முனைப்புள்ளது (தே கடாக்ஷவ்யாபார: ஸ்வயமபி தீநாவநபர:. விஶத !) அப்பழுக்கற்றவரே! அந்தக்கடைக்கண்பார்வை என்னைப் பரிவுடன் காக்கிறது. (ஸ: க்ருபயா மாம் பாதி) படைப்பவர் இப்போது நான்கு தலைகளாலும் செயலாற்றுகிறார். அது உமது பொறுப் புணர்ச்சியால் நடைபெறுகிறது. வினை பலன் தருகிறது. அது அதன் இயல்பு. வினைப்பயனால் நான் துயருறு கிறேன். அது வினைப்பயன். கடும் கோடையில் திடீரென இளம் தென்றல் வீசுவதுபோல் உமது பார்வை என் மீது இதமாகப்படுகிறது. தாபமில்லை. வினை இருக்கட்டும். விதி இருக்கட்டும். இவற்றினிடையே உமது கருணை குடைபி டிக்கிறது.

வினை விலகியதால் உம் திருவடி கண்டேனா? உம் திருவடி கண்டதால் வினை விலகியதா? உம்பரிவால் உம் திருவடி அடைந்தேனா? ஏதேனும் இருக்கட்டும். வினையால் வந்த துயர் நீங்காவிட்டாலும் பாதகமில்லை. துயரை உணர்கிற மனநிலை இல்லை. உம் பார்வைபட்டதால் வந்த பயன் அது.

फलाद्वा पुण्यानां मयि करुणया वा त्वयि विभो
प्रसन्नेऽपि स्वामिन् भवदमलपादाब्जयुगलम्।
कथं पश्येयं मां स्थगयति नमस्संभ्रमजुषाम्
निलिम्पानां श्रेणिर्निज कनकमाणिक्यमकुटैः ॥ १७॥

ப்பலாத்வா புண்யாநாம் மயி கருணயா வா த்வயி விபோ
ப்ரஸந்நேऽபி ஸ்வாமிந் பவதமலபாதாப்ஜயுகலம் ।
கதம் பஶ்யேயம் மாம் ஸ்த்தகயதி நமஸ்ஸம்ப்ரமஜுஷாம்
நிலிம்பாநாம் ஶ்ரேணிர்நிஜ கநகமாணிக்யமகுடை: ॥ 17 ॥

(விபோ !) எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவரே ! (ஸ்வாமின்!) என் உடைமையாளரே ! இறைவனே ! நான் செய்த நல்வினைப்பயனுகவோ, என்னிடம் நீர்காட்டுகிற அவ்யாஜ கருணையாலோ, நீர் என்முன் தோன்றியுள்ளீர். (புண்யாநாம் பலாத்வா மயி கருணயா வா த்வயி ப்ரஸந்நே அபி) எனினும் உமது திருவடித்தாமரைகளை எப்படிக் காண்பேன்? (பவத் அமல பாதாப்ஜயுகலம் கதம் பஶ்யேயம் !) நானோ மிக எளியவன். எனக்குமுன்னர் கூட்டம் கூட்டமாகத் தேவர்கள் நிற்கின்றனர். அவர்களின் தலையில் மாணிக்கம் இழைத்து ஒளிர்கிற தங்கக்கிரீடங்கள். அவர்களும் நான் முந்தி நான் முந்தி எனப் பரபரப்புடன் முண்டிய டித்து வணங்கமுன் நிற்கின்றனர். அந்தக் கூட்டம் என்னை முன்னேற விடாமலும் திருவடிகளை நெருங்கி வணங்கமுடியாமலும் தடுக்கின்றது. (நமஸ்ஸம்ப்ப்ரம ஜுஷாம் நிலிம்பாநாம் ஶ்ரேணி: நிஜ கனக மாணிக்ய மகுடை: மாம் ஸ்த்தகயதி) உம்பார்வை இவர்களைத் தாண்டி என்மீது படக் கூடும். நான் உம் திருவடிகளைக் கூடக் காண இயலவில்லையே. அருகாமையும் பலன்தரவில்லையே !

त्वमेको लोकानां परमफलदो दिव्य पदवीं

वहन्त स्त्वन्मूलां पुनरपि भजन्ते हरिमुखाः ।

कियद्वा दाक्षिण्यं तव शिव मदाशा च कियती

कदा वा मद्रक्षां वहसि करुणा पूरित दृशा ॥ १८ ॥

த்வமேகோ லோகாநாம் பரமபலதோ திவ்ய பதவீம்
வஹந்த ஸ்த்வந்மூலாம் புநரபி பஜந்தே ஹரிமுகா: ।
கியத்வா தாக்ஷிண்யம் தவ ஶிவ மதாஶா ச கியதீ
கதா வா மத்ரக்ஷாம் வஹஸி கருணா பூரித த்ருஶா ॥ 18 ॥

(ஶிவ!) சிவபெருமானே ! முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்படுகிறேன். நீர் எத்தனை பெரியவர் ! உலகமனைத்திற்கும் படியளப்பவர். மிக உயர்ந்த பலனைத் தருபவர் நீர் ஒருவரே. (லோகாநாம் பரமபலத: ஏக: த்வம்) உமது அருளால் தேவ அதிகாரம் பெற்ற இந்திரன் (விஷ்ணு) முதலானோர் மேலும் உயர்வை விரும்பி உம்மை வழிபடுகிறார்கள். (த்வந் மூலாம் திவ்யபதவீம் வஹந்த: ஹரிமுகா: புநரபி பஜந்தே.) அவர்களுக்கு உம்முன் நிற்க முன்னுரிமை யுண்டு. அதனுல் அவர்களை அகலச் செய்து உமது முன் வர எனக்குத் தகுதியில்லை. ஆனுல் நீர்தான்

என்னைக் காக்கவேண்டுமென்ற என் எதிர்பார்வை எவ்வளவு பெரிது? (மதாஶா ச கியதீ?) என் விருப்பத்திற்குச் செவி சாய்த்து என் கோரிக்கைகு இணங்கும் பரிவு எத்தனை பெரிது? (தவ தாக்ஷிண்யம் கியத் வா?) இறைவ! என்னால் சிறிதும் பொறுக்க முடியவில்லை. கருணைதளும்புகிற பார்வையால் என்று என்னைக் காக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்வீர்? (கதா வா கருணாபூரித த்ருஶா மத்ரக்ஷாம் வஹஸி?)

दुराशा भूयिष्ठे दुरधिप गृहद्वार घटके
दुरन्ते संसारे दुरित निलये दुःखजनके।
मदायासं किं न व्यपनयसि कस्योपकृतये
वदेयं प्रीतिश्चेत् तव शिव कृतार्थाः खलु वयम्॥ १९॥

துராஶா பூயிஷ்ட்டே துரதிப க்ருஹத்வார கடகே
துரந்தே ஸம்ஸாரே துரித நிலயே து:க்கஜநகே ।
மதாயாஸம் கிம் ந வ்யபநயஸி கஸ்யோபக்ருதயே
வதேயம் ப்ரீதிஶ்சேத் தவ ஶிவ க்ருதார்தா: கலு வயம் ॥ 19 ॥

எதனிடமிருந்து என்னைக் காக்கவேண்டும்? என்னைச் சூழ்ந்துள்ள பிறப்பு வாழ்வு மறைவு என்ற சுழல் எல்லை காண இயலாததாக உள்ளது. (ஸம்ஸாரே துரந்தே) திரும்பத்திரும்பத் தீவினை புரியுமிடம் அது. (துரித நிலயே) வினைப்பயனாகத் துன்பங்களை உற்பத்தி செய்கிறது. (து:க்க ஜநகே) கெட்டவிருப்பங்களைப் பெரும்பாலும் தோற்றுவிக்கிறது. (துராஶாபூயிஷ்ட்டே) ஆவல் எவ்வகையிலும் நிறைவுறாததால் நல்லவன் கெட்டவன் என்ற பாகுபாடின்றிப் பெரும்பாலும் கெட்ட செல்வந்தரின் வீட்டுவாசலில் கால் கடுக்க நிற்கவைக்கிறது. ஏன் எனக்கேற்படுகிற ஆயாசத்தை நீர் அகற்றுவதில்லை? யாருக்கு உதவ? (மதாயாஸம் கிம் ந வ்ய பநயஸி? கஸ்ய உபக்ருதயே?) நான் துன்பப்படுவதில் யாருக்கு என்னலாபம்? அது உமக்கு விருப்பமாகில் சொல்லும்? (ஶிவ) சிவபெருமானே! நாங்கள் கடைத்தேறியவர்களே. (வயம் க்ருதார்த்தா க்கலு ?) சிவபெருமானை மகிழ்விக்க நாங்கள் துன்பப்படுகிறோம் என்று பெருமையுடன் சொல்லிக் கொள்வோம். துன்பப்படுவதால் வினை தீருமென்று நீர் நினைத்தால் அதுவும் எமக்கு நல்லதே.

सदा मोहाटव्यां चरति युवतीनां कुचगिरौ
नटत्याशाशाखास्वटति झटिति स्वैरमभितः।
कपालिन् भिक्षो मे हृदय कपिमत्यन्त चपलम्
दृढं भक्त्या बध्वा शिव भवदधीनं कुरु विभो ।। २० ।।

ஸதா மோஹாடவ்யாம் சரதி யுவதீநாம் குசகிரௌ
நட த்யாஶாஶாகா ஸ்வடதி ஜடிதி ஸ்வைரமபித: ।
கபாலிந் பிக்ஷோ மே ஹ்ருதய கபிமத்யந்த சபலம்
த்ருடம் பக்த்யா பத்வா ஶிவ பவததீநம் குரு விபோ ॥ 20 ॥

*நீர் என்னைக் காப்பது உமது தனிவிருப்பத்தை ஒட்டியது. உமது பணிகளில் உதவும்படி ஒன்றைத் தருகிறேன். ஏற்பீரோ? என் இதயம் எனும் குரங்கு உள்ளது. அது மதிமயக்கம் தருகிற காட்டில் சுற்றித் திரிகிறது* (ஸதா மோஹாடவ்யாம் சரதி) *பருவப்பெண்களின் மார்பகமேடுகளில் கூத்தாடுகிறது. நிறைவேறுத எதிர்பார்வைகளாகிய மரக்கிளைகளில் வேகத்துடன் நாற்புறமும் தன்னிச்சைப்படி தாவித்தாவிச் செல்கிறது.* (யுவதீநாம் குச கிரௌ நடதி. ஆஶாஶாகாஸு ஜடிதி ஸ்வைரம் அபித: அடதி). *கபாலமேந்தி அடிக்கடி பிச்சையெடுக்கச் செல்பவரே !* (கபாலின் ! பிக்ஷோ ஶிவ !) *சிவபெருமானே எங்கும் நிறைந்தவரே* (விபோ!) *இங்குமங்கும் ஓடியாடி ஓரிடத்தில் நிலைகொள்ளாமல் திரிகிற என் இதயமாகிய குரங்கை பக்தி எனும் கயிற்றால் திடமாகக் கட்டி உமது அதீனமாக்கிக் கொள்ளும்.* (அத்யந்த சபலம் மே ஹ்ருதயகபிம் த்ருடம் பக்த்யா பத்த்வா பவததீநம் குரு)

*என்மனம் ஒரு குரங்கு. அது என்னை ஆட்டிவைக்கிறது. அதை உம்மிடம் உம்பொருளாக்கித் தருகிறேன். நீர் தேர்ந்த குரங்காட்டி. அது உம் விருப்பப்படி ஆடும். உமக்கும் பிக்ஷை கிடைக்கும். எங்கள் மனத்தைத் தான் நீர் பிக்ஷையாகக்கேட்கிறீர். என்மனத்தையே நீர் வசப்படுத்தியதைக் கண்டு மற்றவரும் தம் தம் மனத்தைத்தருவர்.*

धृति स्तंभाधारां दृढगुण निबद्धां सगमनाम्
विचित्रां पद्माढ्यां प्रति दिवस सन्मार्ग घटिताम्।
स्मरारे मच्चेतः स्फुट पट कुटीं प्राप्य विशदां
जय स्वामिन् शक्त्या सह शिवगणै स्सेवित विभो ।। २१ ।।

த்ருதி ஸ்தம்ப்பாதாராம் த்ருடகுண நிபத்தாம் ஸகமநாம்
விசித்ராம் பத்மாட்ட்யாம் ப்ரதி திவஸ ஸந்மார்க கடிதாம் ।
ஸ்மராரே மச்சேத: ஸ்புட பட குடீம் ப்ராப்ய விஶதாம்
ஜய ஸ்வாமிந் ஶக்த்யா ஸஹ ஶிவகணை ஸ்ஸேவித விபோ ॥ 21 ॥

*நான் ஒரு கூடாரம் (குடில்) அமைத்துத் தருகிறேன். அதில் தங்குவீர். மன்மதனின் எதிரியே ! பகைவன் என்றொருவன் இருந்து விட்டால் தக்கபாதுகாப்புள்ள இடத்தில் தான் தங்கவேண்டும். என்மனமாகிய கூடார முள்ளது. அது விசாலமானது. தூயது.* **(விஶதாம்)** *உறுதி எனும் தூண்களின் ஆதாரத்தில் அமைந்தது (முறை வழுவாத சித்தத்தின் திடமே த்ருதி - உறுதி)* **(த்ருதிஸ்தம்ப்பாதாராம்)** *வைராக்கியம் ஸத்யம் அஹிம்ஸை முதலிய திடக்கயிறுகளால் (குணம் - சிறப்பு, கயிறு) குணங்களால் - இறுக்கிக் கட்டப்பட்டது* **(த்ருடகுணநிபத்தாம்)** *விரும்பியவாறு போய்வர உதவுவது* **(ஸகமநாம்)** *மனத்தைக் கவர்வது* **(விசித்ராம்)** *தாமரை வடிவில் அமைந்தது, தாமரை நிரம்பியது* **(பத்மாட்ட்யாம்)** *தினமும் போக்குவரத்துள்ள நல்ல பாதையில் அமைக்கப்பெற்றது. நல்லோர் தினமும் செய்கிற நல்ல முறையில் பழக்கப்பட்டது.* **(ப்ரதிதிவஸஸந்மார்க கடிதாம்).** *இத்தகைய பல வசதிகள் உள்ள என் உள்ளமாகிய வெளிச்சமிக்க துணிக் கூடாரத்தில் உட்சென்று விளங்குவீர். நீர்மட்டுமல்ல. உம் சக்தியான தேவியும் உம் பணிவிடையாளர்களாகிய சிவகணங்களும் உம்மை வழிபட எல்லோரும் சேர்ந்தே இங்கு தங்கலாம்* **(ஸ்வாமின்!)** *இறைவ !* **(விபோ)** *எங்கும் நிறைந்தவரே !* **(மச்சேத: ஸ்ப்புட பட குடீம் ப்ராப்ய ஶக்த்யா ஸஹ ஶிவகணை: ஸேவித ! ஜய !)**

*இந்தக் குடிலை த்த்ருதி (உறுதி) என்ற தூண் தாங்குகிறது. யோக முறையோடு அமைந்து, மனம் பிராண சக்தி இந்திரியங்களை பிராணாயாமம் பிரத்யாஹாரம் என்ற பயிற்சிகளால் ஒரு நிலையில் வைத்தது. எந்த வெளித்தாக் கலுக்கும் உள் தாக்கலுக்கும் ஈடுகொடுக்கும்.*

*என் வீட்டில் ஒரு திருடன் உள்ளான். அவன் என் பேரில் திருட்டுக்குற்றத்தைச் சுமத்தித் தான் தப்பித்துக் கொள்கிறான். தஸ்கராணாம் பதயே நம: என வேதம் திருடர்களைக்*

கட்டுப்படுத்துபவர் என உம்மை விளம்பரப்படுத்துகிறது. அவனைக் கட்டுப்படுத்தி என்னைக் குற்றத்திலிருந்தும் விடுவிப்பீர்.

प्रलोभाद्यै रर्थाहरण परतन्त्रो धनि गृहे
प्रवेशोद्युक्तस्सन् भ्रमति बहुधा तस्करपते।
इमं चेतश्चोरं कथ मिह सहे शंकर विभो
तवाधीनं कृत्वा मयि निरपराधे कुरु कृपाम्॥ २२॥

ப்ரலோபாத்யை ரர்த்தாஹரண பரதந்த்ரோ தநி க்ருஹே
ப்ரவேஶோத்யுக்தஸ்ஸந் ப்ரமதி பஹுதா தஸ்கரபதே ।
இமம் சேதஶ்சோரம் கத மிஹ ஸஹே ஶங்கர விபோ
தவாதீநம் க்ருத்வா மயி நிரபராதே குரு க்ருபாம் ॥ 22 ॥

திருடர் தலைவரே! (தஸ்கரபதே) மங்களத்தைச் செய்பவரே! (ஶங்கர!) மங்களமாகவே இருப்பதால் மங்களம் செய்வது உமக்கு இயல்பு. எங்கும் நிறைந்தவரே. (விபோ!) பொருளைக் காட்டி ஏமாற்றிப் பொருள் பறிப்பதிலேயே தன் செயலாற்றலை நன்கு காட்டுகிற என்மன மாகிற திருடன் (ப்ரலோபாத்யை: அர்த்தாஹரண பரதந்த்ர:) இதுவரை என் வீட்டிலுள் சுற்றியவன் செல்வந்தர் வீட்டினுள் நுழைய முற்பட்டவனாக பலதடவை ஊரெங்கும் சுற்றி வருகிறான். (தநிக்ருஹே ப்ரவேஶோத்யுக்தஸ் ஸன் பஹுதா ப்ரமதி.) என்னால் பொறுக்கமுடியவில்லை. (கத மிஹ இமம் சேதஶ்சோரம் ஸஹே) இவனை நீர் வசப்படுத்தி உம் கட்டுக்குள் கொண்டுவந்து விட்டால் நல்லவனாகித் திருட்டுத் தொழிலை விட்டு விடுவான். திருடனை உம் வசப்படுத்தி விட்டால், திருடனுடன் கூடிவாழ்ந்த குற்றம் என்னை விட்டு நீங்கும். நான் நிரபராதியாவேன். என்னிடம் பரிவு காட்டுவீர். (தவாதீநம் க்ருத்வா மயி நிரபராதே குருக்ருபாம்) நீரே பெருங்கள்வன். என் மனக்கள்வனுக்கு இடம் கொடுப்பதால் உமக்குக் கேடொன்றுமில்லை. என் மனம் எளிதில் உம் வசப்படாது. அதனால் ''என்னுள்ளம் கவர்கள்வன்'' ஆவீர். (தஸ்கரபதே !) தஸ்கர: ப்ரகாஶசோர: — விழித்திருக்கும் போதே பட்டப்பகலிலேயே திருடுபவன் தஸ்கரன். (ஸ்ரீருத்ரபாஷ்யம்) அந்தத்திருடன் தான் என் மனத்தைத் திருடமுடியும். மனம் என்பது என் ஜீவநிலையில் வாழ்க்கை நடத்த உம்மால் எனக்கு அளிக்கப்பட்ட பணியாள். அவன்

எனக்கும் வசப்படவில்லை. சமுதாயத்திற்கும் வசப்படவில்லை. நீர் தந்த பணியாளை நீரே திரும்ப ஏற்றுக் கொண்டு என்னைக் குற்றமற்றவராக்குவீர்.

மனம் உம் வசப்பட்டதும் இடையூறின்றி நான் வழிபாட்டைத் தொடங்குகிறேன். பலன் என ஒன்றையும் எதிர் பார்க்க மாட்டேன். எந்த பலனும் துன்பத் தொடர்புள்ளதே.

**करोमि त्वत्पूजां सपदि सुखदो मे भव विभो**
**विधित्वं विष्णुत्वं दिशसि खलु तस्याः फलमिति।**
**पुनश्च त्वां द्रष्टुं दिवि भुवि वहन् पक्षिमृगताम्**
**अदृष्ट्वा तत्खेदं कथमिह सहे शंकर विभो॥ २३॥**

கரோமி த்வத்பூஜாம் ஸபதி ஸுகதோ மே பவ விபோ
விதித்வம் விஷ்ணுத்வம் திஶஸி கலு தஸ்யா: பலமிதி ।
புநஶ்ச த்வாம் த்ரஷ்டும் திவி புவி வஹந் பக்ஷிம்ருகதாம்-
அத்ருஷ்ட்வா தத்கேதம் கதமிஹ ஸஹே ஶங்கர விபோ ॥ 23 ॥

எங்கும் நிறைந்தவரே ! (விபோ !) நன்மை புரிபவரே ! (ஶங்கர !) உம் வழிபாட்டைத் தொடங்கியுள்ளேன். ( த்வத் பூஜாம் கரோமி.) உடன் மகிழ்ச்சியைத்தருவீர். (ஸபதி ஸுகதோ பவ) வழிபாட்டின் பலனுக பிரும்மாவாகவோ விஷ்ணுவாகவோ ஆக்குவீரோ? (தஸ்யா: பலம் இதி விதித்வம் விஷ்ணுத்வம் திஶஸி கலு). உமது வழிபாடு மேலான பலனைத்தரும். பிரும்ம நிலையும் விஷ்ணு நிலையும் தான் உயர்நிலைகள். இப்போது எளிதாக உம்மைநேரில் உணர்ந்து வழிபடுகிற நான், பிரும்ம நிலையோ விஷ்ணு நிலையோ பெற்ருல், மறுபடி உம்மைக் காணப் பறவை அல்லது மிருகமாகி (ஹம்ஸம் - பன்றி) மேலும் கீழும் சுற்றி உம்மைக்காணாமல் துயருறுவதை என்ஞல் பொறுக்க முடியாது. ஐயனே ! (புநஶ் ச த்வாம் த்ரஷ்டும் திவிபுவி பக்ஷிம்ருகதாம் வஹன் அத்ருஷ்ட்வா தத் க்கேதம் இஹ கதம் ஸஹே ! விபோ !) வானில் வீற்றிருந்த பிரும்மாவும் விஷ்ணுவும் உமது ஒளிவடிவின் அடியும் நுனியும் காணமுடியாமல் துயரடைந்தது நினைவிற்கு வருவதால் எந்தப்பதவியும் வேண்டேன். என்னை ஆனந்தமாக இருக்கச் செய்வீர். வேறுபலனைவேண்டேன்.

*உமக்கு என் உள்ளத்தைக் குடியிருக்கத் தருவேன். என் மனத்தை உமது பணியாளாக்குவேன். எனக்கென எதுவும் வேண்டேன். உமது அருகாமையும் அதனுல் பெறுகிற ஆனந்தமும் போதும். எனினும் நீர் உமக்கேற்ற வாஸஸ் தலமாகக் கைலாஸத்தைக் கொண்டுள்ளீர். அதனைக் காண, அங்கிருந்து உம் நாமங்களை உரக்கக் கூவ ஜீவன் அடையத் தக்கப்பெரும் பேற்றைப் பெற, மனம் விரும்புகிறது. அருள்வீரா? எப்போது?*

**कदा वा कैलासे कनकमणिसौधे सह गणैः**
**वसन् शंभोरग्रे स्फुट घटित मूर्धांजलिपुटः ।**
**विभो सांब स्वामिन् परमशिव पाहीति निगदन्**
**विधातॄणां कल्पान् क्षणमिव विनेष्यामि सुखतः ॥ २४ ॥**

**கதா வா கைலாஸே கநகமணிஸௌதே ஸஹ கணை:**
**வஸந் ஶம்போரக்ரே ஸ்ப்புட கடித மூர்த்தாஞ்ஜலிபுட: ।**
**விபோ ஸாம்ப ஸ்வாமிந் பரமஶிவ பாஹீதி நிகதந்**
**விதாத்ரூணாம் கல்பாந் க்ஷணமிவ விநேஷ்யாமி ஸுகத: ॥ 24 ॥**

*கைலாஸத்தின் முடியில் தங்கமும் ரத்தினங்களும் இழைத்தமைந்த திருமாளிகையில், உமது கணங்களுடன் கலந்து நின்று, சென்னிமேல் அஞ்சலி செய்து உம்முன் நின்று எங்கும் நிறைந்த பெருமானே! அம்மையப்பனே! இறைவ! பரமசிவ! காப்பீர் என்ற வாயாறப்பாடி மெய்மறந்து பலகல்பகாலங்களையும் நொடியென இனிது என்று கழிப்பேன்!*
**(கைலாஸே கனகமணிஸௌதே கணை: ஸஹ வஸன் ஶம்போ: அக்ரே ஸ்ப்புடகடித மூர்த்தாஞ்சலிபுட: (மூர்த்த் தஸ்ப்புடகடித பத்தாஞ்ஜலிபுட:) விபோ! ஸாம்ப! ஸ்வாமின்! பரமஶிவ! பாஹி! இதி நிகதன், விதாத்ரூணாம் கல்பான் க்ஷணமிவ கதாவா நேஷ்யாமி? (நிமிஷ மிவநேஷ்யாமி)**

*என்னையும் என் உணர்வுகளையும் இழக்காமல் தான் கைலாஸம் செல்லவேண்டும். அங்குள்ள சூழ்நிலையை நன்கு ரஸித்து உணரவேண்டும். வாய்விட்டு இறைவனின் நாமங்களைக் கூறவேண்டும். அஞ்சலியைச் சிரசில் கூப்பி குருவாகத் தெய்வமாக உம்மை வணங்கவேண்டும். நேர - இட உணர்வே இல்லாமல் அங்கேயே இருக்கவேண்டும். நானே சிவனுனல்*

*சிவானந்தத்தை அனு பவிக்க இயலாதே!*

**स्तवै ब्र्ह्मादीनां जय जय वचोभि र्नियमिनाम्**
**गणानां केलीभि र्मदकल महोक्षस्य ककुदि ।**
**स्थितं नीलग्रीवं त्रिणयन मुमाश्लिष्ट वपुषं**
**कदा त्वां पश्येयं करधृत मृगं खण्डपरशुम् ।। २५ ।।**

**ஸ்தவைர் ப்ரஹ்மாதீநாம் ஜய ஜய வசோபிர் நியமிநாம்**
**கணாநாம் கேலீபிர் மதகல மஹோக்ஷஸ்ய ககுதி ।**
**ஸ்த்திதம் நீலக்ரீவம் த்ரிணயந முமாஶ்லிஷ்ட வபுஷம்**
**கதா த்வாம் பஶ்யேயம் கரத்ருத ம்ருகம் கண்டபரஶும் ॥ 25 ॥**

*அமர்ந்த திருக்கோலத்தில் கண்டுகளித்ததும் வீதி உலாக் காட்சியையும் காண விழைகிறேன். பிரும்மாதிகளின் துதிபாடல்களுடன்* **(ப்ரம்ஹாதீ நாம் ஸ்தவை:)** *சைவமான விரத நியமங்களைப் பின்பற்றிவருகிற ருஷிகளின் ஜய ஜய விஜயீபவ என்ற கோஷங்களுடன்,* **(நியமிநாம் ஜய ஜய வசோபி:)** *சிவகணங்களின் களியாட்டங்களுடன்,* **(கணாநாம் கேலீபி:)** *மதர்த்து அழகுடன் தலைசாய்த்து நிற்கிற பெருங்காளையின் திமிலைச் சார்ந்து அமர்ந்துள்ள* **(மதகல மஹோக்ஷஸ்ய ககுதி ஸ்த்திதம்.)** *விஷத்தால் கருத்தகழுத்துள்ளவரும் முக்கண்ணரும் உமையிணைந்த மேனியரும்* **(நீலக்ரீவம் த்ரிணயநம் உமாஶ்லிஷ்டவபுஷம்)** *கையில் ஏந்திய மானும் துண்டானகோடரியும் கொண்டவருமான உம்மை* **(கரத்த்ருதம்ருகம், கண்டபரஶும் த்வாம்)** *எப்போது பார்ப்பேன்?* **(கதா பஶ்யேயம்?)** *மாயையால் சிவனையே மாய்க்க வந்தமான் கையலங்காரப் பொருளானது. சீடனிடம் தோற்றதன் அடையாளமாக முனைமுறிந்த கோடரி பக்திக்கு வசமாகித் தன்னை இழந்ததைக் காட்டுகிறது. இவ்வளவு போதுமா? போதாது ஐயனே!*

**कदा वा त्वां दृष्ट्वा गिरिश तव भव्यांघ्रियुगलम्**
**गृहीत्वा हस्ताभ्यां शिरसि नयने वक्षसि वहन् ।**
**समाश्लिष्याघ्राय स्फुट जलज गन्धान् परिमलान्**
**अलभ्यां ब्रह्माद्यै र्मुद मनुभविष्यामि हृदये ।। २६ ।।**

கதா வா த்வாம் த்ருஷ்ட்வா கிரிஶ தவ பவ்யாங்க்ரியுகலம்
க்ருஹீத்வா ஹஸ்தாப்யாம் ஶிரஸி நயநே வக்ஷஸி வஹந் ।
ஸமாஶ்லிஷ்யாக்ராய ஸ்புட ஜலஜ கந்தாந் பரிமலாந்
அலப்யாம் ப்ரஹ்மாத்யைர்முத மநுபவிஷ்யாமி ஹ்ருதயே ॥ 26 ॥

*மலைவாழ்பெருமானே !* (கிரிஶ!) *உம்மை கண்ணாரக் கண்டு* (த்வாம் த்ருஷ்ட்வா) *உமது அழகிய இரு திருவடிகளையும் கைகளால் ஏந்தித் தலையிலும் கண்களிலும் மார்பிலும் ஒத்தி,* (தவ பவ்யாங்க்ரியுகளம் ஹஸ்தாப்யாம் க்ருஹீத்வா ஶிரஸி நயநே வக்ஷஸி வஹன்,) *இறுகத்தழுவி திருவடிகளில் சாற்றியுள்ள மலர்ந்த தாமரைகளின் நறுமணத்தை முகர்ந்து,* (ஸமாஶ்லிஷ்ய பரிமளான் ஸ்ப்புட ஜலஜ கந்த்தான் ஆக்ராய) *பிரம்மா முதலானோர் கூட இதுவரை பெற்றிராத ஆனந்தத்தை இதயத்தில் எப்போது அனுபவிப்பேன்.?* (ப்ரம்ஹாத்யை: அலப்யாம் முதம் கதா வா அனுபவிஷ்யே!) *நூல்களின் மூலம் உணர்ந்தும் பெரியோர்களிடமிருந்து கேட்டும் நேரிடையாக உணராதிருந்த சிவானந்தத்தை இதே உடலாலும் பொறிகளாலும் மனத்தாலும் நேரிடையுணர்வாகப் பெறுவதெப்போது?*

வைத்திடுங்காலைப்பிடித்துக் கண்ணில் மார்பில்
வைத்தணைத்துக் கொண்டு கையால் வளைத்துக்கட்டிச்
சித்தமிசை புக இருத்திப்பித்துக் கொண்டு
தியக்கமற இன்பசுகம் சேர்வதென்றோ !

**करस्थे हेमाद्रौ गिरिश निकटस्थे धनपतौ**
**गृहस्थे स्वर्भूजामर सुरभि चिन्तामणिगणे।**
**शिरस्थे शीतांशौ चरण युगलस्थेऽखिलशुभे**
**कमर्थं दास्येऽहं भवतु भवदर्थं मम मनः ॥ २७ ॥**

கரஸ்த்தே ஹேமாத்ரௌ கிரிஶ நிகடஸ்த்தே தநபதௌ
க்ருஹஸ்த்தே ஸ்வர்பூஜாமர ஸுரபி சிந்தாமணிகணே ।
ஶிரஸ்த்தே ஶீதாம்ஶௌ சரண யுகலஸ்த்தேऽகிலஶுபே
கமர்த்தம் தாஸ்யேऽஹம் பவது பவதர்த்தம் மம மந: ॥ 27 ॥

*பெரியோர் குரு தெய்வம் முதலானோரைக் காணச் செல்லும் போது காணிக்கை ஸமர்பிப்பது மரபு.* (கிரிஶ) *மலையில் உறைபவரே ! கையில் கனகமலையிருக்க,*

(ஹேமாத்ரௌ கரஸ்த்தே), அருகில் செல்வத்திற்கு அதிபரான குபேரரிருக்க (தநபதௌ நிகடஸ்த்தே,) கற்பக மரம், காமதேனு சிந்தாமணி ரத்னக்குவியல் இவை வீட்டில் இருக்க, (ஸ்வர்பூஜ - அமரஸுரபி சிந்தாமணி கணே க்ருஹஸ்த்தே,) குளிர் கிரணங்கள் கொண்ட சந்திரன் தலையிலிருக்க, (ஶீதாம்ஶௌ ஶிரஸ்த்தே) எல்லா மங்களங்களும் காலடியில் காத்திருக்க, (அகில ஶுபே சரணயுகலஸ்த்தே) நான் எந்தப்பொருளை அளிப்பேன். ? என் மனம் இதுகாறும் உம் வசத்தில் இல்லை. என் மனம் உமக்கு இருக்கட்டும். (கமர்த்தம் அஹம் தாஸ்யே? மம மந: பவதர்த்தம் பவது).

सारूप्यं तव पूजने शिव महादेवेति संकीर्तने
सामीप्यं शिवभक्ति धुर्यजनता सांगत्य संभाषणे।
सालोक्यं च चराचरात्मक तनु ध्याने भवानीपते
सायुज्यं मम सिद्धमत्र भवति स्वामिन् कृतार्थोस्म्यहम्॥ २८॥

ஸாரூப்யம் தவ பூஜநே ஶிவ மஹாதேவேதி ஸங்கீர்தநே
ஸாமீப்யம் ஶிவபக்தி துர்யஜநதா ஸாங்கத்ய ஸம்பாஷணே।
ஸாலோக்யம் ச சராசராத்மக தநுத் த்யாநே பவாநீபதே
ஸாயுஜ்யம் மம ஸித்த்த மத்ர பவதி ஸ்வாமிந் க்ருதார்த்தோஸ்ம்யஹம் ॥

சிவலோகமான கைலாஸத்தினுள் நுழையக்கோடி புண்ணியம் தேவை. அங்கு சென்றதும் ஸாரூப்யம், ஸாமீப்யம். ஸாலோக்யம், ஸாயுஜ்யம் என்று சிவபெருமானுடன் இரண்டறக்கலக்கப் படிகள் உண்டு என்பர். எனக்கு அவை இங்கேயே இப்போதே கிட்டிவிட்டன. உம்மை வழிபடும் போது விபூதியும் ருத்ராக்ஷமும் அணிந்து சிவவேஷம் பூண்டு சிவோஹம் என்று அடிக்கடி உணர்ந்து என் இதயத்திலிருந்து உம்மை வெளிக்கொணர்ந்து வழிபட்டு மறுபடி என் இதயத்திலுள் கொணர்ந்து ஶிவ: ஸோஹம் ஸோஹம் ஶிவ: என்று பாவிப்பதால் சிவ ரூபம் பெற்று, ஸாரூப்யமுக்தி பெற்றதாகிறது. (தவ பூஜநே ஸாரூப்யம்). உள்ளத்திலும் உம்மைக் கண்டு இனம் புரியாத ஆனந்தத்தால் சிவ! மஹாதேவ! என்று கூப்பிட்டதும் உம் அருகாமையை உணர்கிறேன். இது ஸாமீப்யமுக்தி பெற்றதாகிறது. (ஶிவ மஹாதேவ இதி ஸங்கீர்தநாத் ஸாமீப்யம்) சிவபக்தி மிக்க பெரியோர்களுடன்

கலந்துரையாடுவதால் சிவலோகத்திலிருப் பதாக உணர்கையில் ஸாலோக்ய முக்தி பெற்றதாகிறது. (ஶிவ பக்தி தூர்ய ஜநதா ஸாங்கத்ய ஸம்பாஷணே ஸாலோக்யம்) சரமும் அசரமுமாயுள்ள உமது வடிவைத் தியானம் செய்யும் போது என் உடல். - பொறி - மனக் கூட்டும் சரமும் அசரமுமானதால் உம்மோடு கலந்து விட்டதாக நினைக்கும்போது ஸாயுஜ்ய முக்தி இங்கேயே பெற்றதாகிறது (சராசராத்மக தநுத்த்யாநே மம ஸாயுஜ்யம் அத்ர ஸித்த்தம் பவதி.) பவானியின் பதியான இறைவ ! (பவானீபதே ஸ்வாமின் !) நான் அடைய வேண்டியநிலையை அடைந்தவனாகி விட்டேன். (அஹம் க்ருதார்த்த: அஸ்மி) தன்யனானேன்.

त्वत्पादांबुज मर्चयामि परमं त्वां चिन्तयाम्यन्वहम्
त्वामीशं शरणं व्रजामि वचसा त्वामेव याचे विभो।
वीक्षां मे दिश चाक्षुषीं सकरुणां दिव्यैश्चिरं प्रार्थिताम्
शंभो लोकगुरो मदीयमनसस्सौख्योपदेशं कुरु॥ २९॥

த்வத்பாதாம்புஜ மர்சயாமி பரமம் த்வாம் சிந்தயாம்யந்வஹம்
த்வாமீஶம் ஶரணம் வ்ரஜாமி வசஸா த்வாமேவ யாசே விபோ ।
வீக்ஷாம் மே திஶ சாக்ஷுஷீம் ஸகருணாம் திவ்யைஶ்சிரம் ப்ரார்த்திதாம்
ஶம்போ லோககுரோ மதீயமநஸஸ்ஸௌக்யோபதேஶம் குரு ॥ 29

பர தெய்வ நிலையிலுள்ள நீர் குருவாய்வந்து என்னை ஆட்கொண்டு என்மனத்தைப் பரசிவாநந்த நிலையடைய வழிகாட்டுவீர். குருவாக வரித்து உம்திருவடித்தாமரைகளை வழிபடுகிறேன். (த்வத்பாதாம்புஜம் அர்சயாமி.) மேலான உம்மை நான் நாள்தோறும் உள்ளத்தில் உருவகப் படுத்துகிறேன். (பரமம் த்வாம் அன்வஹம் சிந்தயாமி) தியானத்தால் ஈசனுக உருப்பெற்ற உம்மைச் சரணடைகிறேன். (த்வாம் ஈஶம் ஶரணம் வ்ரஜாமி.) வாக்கால் உம்மையே வேண்டுகிறேன். எங்கும் நிறைந்த மங்களத்தின் இருப்பிடமே ! (விபோ! ஶம்போ! வசஸா த்வாமேவ யாசே!) தேவர்களால் நெடுங்காலமாக எதிர்ப்பார்க்கப்படுகிற உமது கருணை நிரம்பிய கடைக்கண் பார்வையை என்மீது செலுத்துவீர். குரு தருகிற சாக்ஷுஷ தீக்ஷயாக இது அமையட்டும். (திவ்யை: சிரம் ப்ரார்த்திதாம் ஸகருணாம் சாக்ஷுஷீம் வீக்ஷாம் மே மயி திஶ) நீரோ உலகத்தின் குரு. அதனுல் எனக்கும் குரு. என்மனம் பேரானந்தம் பெற

வழிதேடுகிறது. அது இங்கே இதோ இவ்வாறு இருக்கிறது என்று சுட்டிக் காட்டுபவராகி அருகில் நின்று வழிகாட்டுகிற குருவாகி நின்று செய்கிற உபதேசத்தைச் செய்வீராக (ஶம்போ ! லோககுரோ ! மதீயமநஸ: ஸௌக்க்யோபதேஶம் குரு)

वस्त्रोद्धूतविधौ सहस्रकरता पुष्पार्चने विष्णुता
गन्धे गन्धवहात्मताऽन्नपचने बर्हिर्मुखाध्यक्षता।
पात्रे कांचनगर्भतास्ति मयि चेद्बालेन्दुचूडामणे
शुश्रूषां करवाणि ते पशुपते स्वामिन् त्रिलोकीगुरो॥ ३०॥

வஸ்த்ரோத்தூதவிதௌ ஸஹஸ்ரகரதா புஷ்பார்சநே விஷ்ணுதா
கந்தே கந்தவஹாத்மதாந்நபசநே பர்ஹிர்முகாத்த்யக்ஷதா ।
பாத்ரே காஞ்சநகர்ப்பதாஸ்தி மயி சேத்பாலேந்துசூடாமணே
ஶுஶ்ரூஷாம் கரவாணி தே பஶுபதே ஸ்வாமிந் த்ரிலோகீகுரோ ॥

மூவுலகிற்கும் குருவே: ! (த்ரிலோகீ குரோ !) இறைவ ! (ஸ்வாமின் !) பசுக்களின் நாதனே ! (பஶுபதே) இளம்பிறை சூடியவரே ! (பாலேந்து சூடாமணே !) உமக்குப் பணிவிடை புரிய என்னிடம் தகுதி சிறிதும் இல்லை. உம்மை நீராட்டியதும் உமது ஆடைகளை உலர்த்தவேண்டும். உலகே வடிவான உமக்கு திசைகளே ஆடை. அவற்றை அலசிப்பிழிந்து உலர்த்த ஓரிருகரங்கள் போதா. ஆயிரம் கரங்கள் தேவை. அதற்கு ஆயிரம் கரங்கள் (கிரணங்கள்) உள்ள சூரியனாகவேண்டும். (வஸ்த்ரோத்தூத விதௌ ஸஹஸ்ரகரதா). எங்கும் நிறைந்த பரமனைப்பாமரன் வழிபடமுடியாது. ஆயிரக்கணக்கில் தாமரைகளைக் கொணர்ந்து ஆயிரம்கைகளால் அர்ச்சித்தும் முழுப்பூஜைக்கும் பூ போதாமல் தன்கண்களையே விஷ்ணு பூவாக்கிப்பூஜையை முடித்தாராம். பூக்களால் வழிபட விஷ்ணுவாகவேண்டும். (புஷ்பார்சநே விஷ்ணுதா.) மணமுள்ள பொருளால் வழிபடுவதாயின் முழு அளவில் அப்பொருள் கிட்டாது. மணப்பொருள் குறைவாயினும் மணத்தைச் சுமந்து செல்கிற காற்று மணத்தை எங்கும் நிரம்பிய தாகப் பசப்பிவிடும். கந்தவஹமாகிய காற்றுவதே மணப்பொருளால் வழிபட உதவும். (கந்த்தே கந்த வஹாத்மதா). நிவேதனத்திற்கு உரிய உணவு முழுவதையும் சமைக்க உலகிலுள்ள அக்னி போதாது. அதனால் சிறிதளவு ஹோமப்பொருளையும் அதனை ஏற்கிற

தேவதைக்குத் திருப்தி கிடைக்குமாறு மாற்றிக் கொடுக்கிற வேள்வித்தீயாக வேண்டும். ஒரு பிடி அன்னத்தையும் சிறுகரண்டி நெய்யையும் தேவதைக்குப் பூர்ணதிருப்தி தருவதாக மாற்றுத்தருகிற பெருமை வேள்வித்தீக்கு மட்டுமே உண்டு. (அந்ந பசநே பர்ஹிர் முகாத்த்யக்ஷுதா.) வழிபாட்டிற்குரிய பாத்திரங்கள் தங்கத்தில் அமைந்தால் நல்லதே. உலகைப் படைக்கு முன் பெரிய தங்க பாத்திரத்தை மூடியுடன், உலகையும் அதனைப் படைக்கவிருப்பவரையும் கொள்ளுமளவில் உருவாக்கி, அதனுள் உலகின் மூலப்பொருளையும் பிரம்மாவையும் விட்டுச் சுற்றி நின்று பரம்பொருள் பாதுகாத்ததாம். அந்நிலையில் அதன் பெயர் ஹிரண்யகர்ப்பர். சமைக்க நீர்படைத்த அந்த தங்கபபாத்திரமே தக்கது. தங்கம் போன்று தக தக என்று ஒளிர்விடுகிற உலக மூலப்பொருளைத் தன் கருவில் கொண்ட ஹிரண்யகர்ப் நிலை வேண்டும். (பாத்ரே காஞ்சந கர்ப்பதா). இது அனைத்தும் என்னிடமிருக்குமேயாகில் நான் உமக்குப் பணிவிடை புரிவேன். (இதம் ஸர்வம் மயி அஸ்தி சேத் ஶுஶ்ரூஷாம் கரவாணி).

பணிவிடை என்பது வழிபடப்பெறுபவர் முழுத்திருப்தி பெறுமளவு அமைந்தால் தான் நல்லது. சிவபெருமானது பெருமையும் வழிபடுபவனது சிறுமையும் சீர்தூக்கிப்பார்க்கு மளவிற்கு எதுவும் என்றும் ஒவ்வாது.

பக்தர் பகவானிடம் தான் மூன்று குற்றங்கள் புரிந்துள்ளதை விண்ணப்பித்தார். உருவமற்றவரை தியானத்தால் உருவகப்படுத்த முனைந்தது, வாக்கிற் கெட்டாதவரை துதியால் இவர் இன்னார் என்று குறிப்பீட்டிற்குள் அடக்கியது, எங்கும் பரவிநிற்பவரை கோயில் கொண்டிருப்பதாகக்குறுக்கியது. என்பவை. அந்தக் குற்றங்கள் மன்னிக்கத்தக்கவை என வேண்டுகிறார். रूपं रूपविवर्जितस्य भवतो ध्यानेन यत्कल्पितं स्तुत्याऽनिर्वचनीयताऽखिलगुरो दूरीकृता यन्मया। व्यापित्वं च निराकृतं भगवतो यत्तीर्थयात्रादिना क्षन्तव्यं जगदीश तद्विकलता दोषत्रयं मत्कृतम्॥ என. அணுவில் அணுவாகவும் பெரிதில் பெரிதாகவும் உள்ள பரமன் நம்வழிபாட்டை ஏற்க நாம் வடித்துள்ள பதுமையில் அடங்கியவராவது அவரது பெருந்தன்மையும் கருணையுமாகும்.

*பரம்பொருள் தான் பலவாக எண்ணியது. தன்னை இரு கூறுக்கிக் கொண்டது - ஸ்வாமி - ஸ்வம் (உடைமையாளர் - உடைமை) என. (ஈசுவரன் - மூலப்ரக்ருதி என) ஸ்வமும் ஸ்வாமியும் படிப்படியாகப் பல நிலை பெற்றனர். உருமாருத - வெளியாகாத மூலமான அவ்விரண்டும் பரம்பொருளின் வயிற்றிலேயே இருந்தன. கால்பங்கு மட்டுமே வெளிப்பட்டு உருமாறின. உருமாற்றத்தின் முதல் நிலை பிரும்மா. அவர் உலகைப் படைக்கப் பணிக்கப்பட்டார். படைப்பு என்பது என்ன? எதனைக் கொண்டு எப்படி எங்கே படைப்பது என அவருக்கு விளக்கம் தர முற்பட்ட ஈச்வரன். பிரும்மாவைத் தான் வந்த வழியே உட்சென்று பார்க்கச் சொன்னர். பிரும்மா சென்று பார்த்தார். ''அந்தஸ்ஸ்தம் யஸ்ய விஶ்வம் ஸுரநரகக கோ பூத கந்தர்வதைத்யைஶ் சித்ரம்'' தான்படைக் கவேண்டிய உலகின் தத்ரூபமான விசித்ரக்காட்சி தெரிந்தது. ஒன்ருயிருந்தது எல்லா மாவதையும் (விஶ்வம்) அதனுள் அந்தர்யாமியாக ஈசுவரன் நுழைந்துள்ளதையும் வெளியேயுள்ள கோசங்கள் தேவர் மனிதர் பறவை மிருகம் கந்தர்வர் அஸுரர் என்றவாறு பெற்ற பல தோற்றங்களையும் கண்டார். வெளியே வந்து அதே ரீதியில் உலகைப்படைத்தார். படைக்கப்பட்டிருக்கும் உலகிற்கு வேருக இதைவிட மும்மடங்குபடைக்கவிருக்கிற உலகம் ஈசுவரனின் உள்ளே (வயிற்றில்) இருப்பதைக் கண்டவர் பிரும்மா மட்டுமல்ல. முசுகுந்தர் யசோதை அர்ஜுனன் போன்ற பல பாக்யவான்களுமுண்டு.*

*தேவரும் அசுரரும் அமுதம் பெறப் பாற்கடலைக் கடைந்தனர். மரணமில்லாத பெருவாழ்வு வேண்டியவர் முன்னே எல்லோரையும் அழிக்க வல்ல விஷம் தோன்றியது. ஈசுவரன் கருணையால் அதை உருட்டி வாயினுட் கொண்டார். வெளி உலகம் காக்கப்பெற்றது. ''அந்தஸ்ஸ்தம் விச்வம்'' உள்ளதே ! அது காக்கப்படவேண்டுமே? விஷத்தைக் கழுத்திலேயே தடுத்து உள்ளும் புறமுமுள்ள உலகங்கள் வாழவழிவகுத்தார் என்பதே நஞ்சுண்டலீலையின் பொருள். மற்றவரை அமுது உண்ணச்செய்யத்தான் விஷமுண்டார்.*

**नालं वा परमोपकारक मिदं त्वेकं पशूनां पते**

**पश्यन् कुक्षिगतान् चराचरगणान् बाह्यस्थितान् रक्षितुम्।**

सर्वामर्त्य पलायनौषधमतिज्वालाकरं भीकरं
निक्षिप्तं गरलं गले न गिलितं नोद्गीर्णमेव त्वया ॥ ३१ ॥

நாலம் வா பரமோபகாரக மிதம் த்வேகம் பஶூநாம் பதே
பஶ்யந் குக்ஷிகதாந் சராசரகணாந் பாஹ்யஸ்த்திதாந் ரக்ஷிதும் ।
ஸர்வாமர்த்ய பலாயநௌஷத மதிஜ்வாலாகரம் பீகரம்
நிக்ஷிப்தம் கரலம் கலே ந கிலிதம் நோத்கீர்ண மேவ த்வயா ॥ 31 ॥

(பஶூநாம் பதே !) *உயிரினமனைத்தின் காப்பாளரே ! உயிரினத்திற்கு நீர் செய்த பெரும் உபகாரம் இது ஒன்றேபோதாதா? வயிற்றிலுள்ளவை வெளியிலுள்ளவை எனப்பிரிந்த சர - அசரப் பொருள்களனைத்தையும் கண்டீர். அவை அழியாமல் காப்பதற்கெனப் பயங்கரமான ஹாலாஹல விஷத்தை வாயிலிட்டீர். அது எல்லா தேவர்களையும் மிரண்டு ஓடச் செய்தது. பெருந்தீ பற்றி எரிவது போன்ற தாபம் தருவது.* (குக்ஷிகதான் பாஹ்யஸ்த்திதான் பஶ்யந் (யதகரோ:) பரம உபகாரகம் இதம் ஏகம்து ந அலம் வா? தான் ரக்ஷிதும் ஸர்வ - அமர்த்ய பலாயனௌ ஷதம் அதிஜ்வாலாகரம் பீகரம் கரளம் த்வயாகளே நிக்ஷிப்தம்) *ஆனால் தொண்டைக்கு உள்ளே விழுங்க படவில்லை உமிழப்படவுமில்லை.* (களே நிக்ஷிப்தம் கரளம் த்வயா ந கிலிதம், நைவ உத்கீர்ணம்).

ज्वालोग्रस्सकलामरातिभयदः क्ष्वेलः कथं वा त्वया
दृष्टः किञ्च करे धृतः करतले किं पक्वजंबूफलम् ।
जिह्वायां निहितश्च सिद्धघुटिका वा कण्ठदेशे भृतः
किं ते नीलमणि र्विभूषण मयं शंभो महात्मन् वद ॥ ३२ ॥

ஜ்வாலோக்ரஸ் ஸகலாமராதிபயத: க்ஷ்வேல: கதம் வா த்வயா
த்ருஷ்ட: கிம்ச கரே த்ருத: கரதலே கிம் பக்வ ஜம்பூபலம் ।
ஜிஹ்வாயாம் நிஹிதஶ்ச ஸித்த்தகுடிகா வா கண்ட்டதேஶே ப்ப்ருத:
கிம் தே நீலமணிர்விபூஷண மயம் ஶம்ப்போ மஹாத்மந் வத ॥ 32॥

*விஷம் உண்டீர். அதனை விழுங்கவுமில்லை. உமிழவுமில்லை. அதனைப்பலர் அறியும்படி காட்டிக் கொண்டே இருக்கிறீரே. விஷமெனக் கண்டால் பதறுவர். அதை நீலரத்தினத்தாலான ஆபரணம்போல காட்டிக்கொள்கிறீரே ! அது ஏன் ! எப்படி? அந்த விஷம் வெளிப்படும்போதே*

கொடுந்தீக்கொழுந்தாய் எரித்தது. எல்லாதேவருக்கும் பெரும் பயம் தந்தது. (க்ஷ்வேல: ஜ்வாலோக்ர: ஸகலாமராதிபயத:) அவர்கள் மிரண்டு ஓடும்போது அந்தத்தீப் பிழம்பை உம்மால் எப்படிப் பார்க்க முடிந்தது? (த்வயா கதம் வா த்ருஷ்ட:) அருகில் நெருங்கிக் கையில் எப்படி எடுக்க முடிந்தது? (கிஞ்சகரே த்த்ருத:?) அது என்ன உள்ளங்கையில் ஏந்த பழுத்த நாவற்பழமா? (கரதலேகிம் பக்வஜம்பூ பலம்?) நாக்கிலிட ஸித்தகுடிகையா? (ஜிஹ்வாயாம் நிஹித: ஸ: ஸித்த்த குடிகாவா?) பாதரஸம் முதலியவற்றை ஓஷதிகளால் ஸித்தி செய்து வானில் விருப்பப்படி செல்ல வாயிலிடுகிற குளிகை ஸித்தகுளிகை. கழுத்தில் தரிக்கப்பட்டதே ! அது என்ன நீலரத்னத்தாலான ஆபரணமா? (கண்டதேஸே ப்ருத: ஸ: கிம் நீல மணி: விபூஷணம்?) (மஹாத்மன்?) நீர் பெரும் ஆளோ? (வத) சொல்வீர். விஷம் வெளி உலகத்தைப் பாதிக்காதிருக்கத் தொண்டையிலிட்டீர். உள்ளுலகைப் பாதிக்காதிருக்க விழுங்காதிருந்தீர். தொண்டையிலும் அது விஷமாக இல்லாதிருக்க அதன் விஷத்தன்மை வெளிப்படாத அணியாக்கினீர். நீல கண்டர், ஸ்ரீகண்டர் என்று புகழ்பெற்றீர். உலகமாக மாறிய உயிரினத்திடமும் உலகமாக மாறவிருக்கிற உயிரினத்திடமும் உள்ள கருணை தானே இது? இந்த எல்லை கடந்த கருணையை வேறெங்கு காணமுடியும்?

கடைத்தேறுவதொன்றே வழிபாட்டின் பயன். அதற்கான உமது வழிபாடோ மிக எளியமுறையிலும் நிறைவுறக் கூடியது. அதனால் உம்மை வழிபடுவதைவிட வேறு என்ன வேண்டும்?

नालं वा सकृदेव देव भवतस्सेवा नतिर्वा नुतिः
पूजा वा स्मरणं कथाश्रवण मप्यालोकनं मादृशाम्।
स्वामिन्नस्थिर देवतानुसरणायासेन किं लभ्यते
का वा मुक्ति रितःकुतो भवति चेत् किं प्रार्थनीयं तदा ॥ ३३

நாலம் வா ஸக்ருதேவ தேவ பவதஸ் ஸேவா நதிர்வா நுதி:
பூஜா வா ஸ்மரணம் கதாஶ்ரவண மப்யாலோகநம் மாத்ருஶாம் ।
ஸ்வாமிந்நஸ்த்திர தேவதாநுஸரணாயாஸேந கிம் லப்ப்யதே
கா வா முக்தி ரித:குதோ பவதி சேத் கிம் ப்ரார்த்தநீயம் ததா ॥ 33 ॥

*தேவனே ! இறைவ ! (தேவ ! ஸ்வாமின் !) என்னைப் போன்றவருக்கு உமக்குப் பணிவிடையோ, நமஸ்காரமோ, துதிப்பதோ, வழிபாடோ, உம் நாமஸ்மரணமோ, உம் திவ்ய கதை கேட்பதோ உம்மைக் காண்பதோ ஒரே தடவை செய்தாலும், கடைத்தேறப் போதாதா?* (பவத: ஸேவா, நதி:, நுதி: வா, பூஜா வா, ஸ்மரணம், கதாஶ்ரவணம், ஆலோகநம் வா மாத்ருஶாம் ஸக்ருத் நாலம் வா?) *இதை விட முக்தி எனத் தனித்து என்ன இருக்கிறது? தேவர்களும் நிலைத்தவர்களல்ல. நிலைத்திராத தேவர்களை வழிபடுகிற உழைப்பால் பெறப்போவது என்ன? வேறு என்ன வேண்டத்தக்கதாக உள்ளது?* (இத: முக்தி: கா வா? அஸ்த்திரதேவதானுஸரணாயாஸேந குத: கிம் லப்ப்யதே? ததா கிம் ப்ரார்த்தநீயம்) *உம்மை வழிபட எவ்வகையிலாவது வாய்ப்பு கிட்டினாலே போதும். அதுவே முக்தி. அதை மற்றதேவர் தர இயலாது.*

*நீர் மரணத்தை வென்றவர். மிருத்யுஞ்ஜயர். தனித்திருந்தாலும் பயம், இரண்டாமவரைக் கண்டாலும் பயம். த்விதீயாத் ஹி பயம் பவதி. சுகம்பெற மற்ருெருவர் (மற்ருென்று) தேவை. இந்த மனித நிலையிலிருந்து உம்மைக் காணும்போது, மரணத்தை வென்றவராக இரண்டாமவர் இல்லாத நிலையிலும் பயமற்றவராக, மற்ருென்றில்லாத நிலையில் ஆனந்தச் செறிவாகக் காணப்படுகிறீரே ! இது விந்தையே!*

**किं ब्रूमस्तव साहसं पशुपते कस्यास्ति शंभो भवद्-**
**धैर्यं चेदृश मात्मनःस्थिति रियं चान्यैः कथं लभ्यते।**
**भ्रश्यद्देवगणं त्रसन्मुनिगणं नश्यत्प्रपञ्चं लयम्**
**पश्यन्निर्भय एक एव विहरत्यानन्द सान्द्रो भवान्॥ ३४॥**

**கிம் ப்ரூமஸ்தவ ஸாஹஸம் பஶுபதே கஸ்யாஸ்தி ஶம்போ பவத்**
**த்தைர்யம் சேத்ருஶ மாத்மந:ஸ்த்திதி ரியம் சாந்யை: கதம் லப்ப்யதே।**
**ப்ப்ரஶ்யத்தேவகணம் த்ரஸந்முநிகணம் நஶ்யத்ப்ரபஞ்சம் லயம்**
**பஶ்யந்நிர்ப்பய ஏக ஏவ விஹரத்யாநந்த ஸாந்த்ரோ பவாந் ॥ 34 ॥**

*பசுபதியே* (பஶுபதே) *சம்புவே* (ஶம்ப்போ) *ஐயனே ! உமது துணிச்சலை என்னவென்று சொல்வோம்.* (தவ ஸாஹஸம்

(அதிக்ருத்ய) கிம் ப்ரூம:?) உமக்கு இருக்கிற இத்தகைய தைரியம் வேறு எவரிடமுள்ளது! (ஈத்ருஶம் பவத்தைர்யம் கஸ்ய அஸ்தி?) நீர் பெற்றுள்ள நிலே வேறு ஒருவரால் எப்படிப் பெறமுடியும்?) (இயம் ஆத்மந: ஸ்த்திதி: ச அந்யை: கதம் லப்ப்யதே ? பிரளயம் நிகழும்போது தேவர்கள் தன் நிலே இழக்க, முனிவர் கூட்டம் நடுங்க, விரிந்து வந்த உலகம் திடீரென மறைய, அந்த பிரளயத்தைப் பயமற்றவராகத் தனித்துப் பார்த்துக் கொண்டு ஆனந்தம் செரிந்துவழிய நீர் கூத்தாடுகிறீரே (ப்ப்ரஶ்யத் தேவகணம் த்ரஸந்முநி கணம் நஶ்யத்ப்ரபஞ்சம் லயம் பஶ்யன், நிர்ப்பய: ஏக: ஏவ, ஆநந்தஸாந்த்ர: பவான் விஹரதி.) இந்நிலேயில் மற்றொருவர் எவ்வாறிருப்பார் என்பதை ஊஹிக்கக் கூட முடியாது.

பகவானிடம் எதை வேண்டுவது? நல்லதைச் செய் என்று? நல்லதைத் தவிர வேறெதனேயும் செய்தறியாத சங்கரனிடம் அது தேவையா? விண்ணப்பித்தால் ஒழிய அவன் என் குறைகளே அறியமுடியாதா? ஸர்வஜ்ஞுயிற்றே? என்றெல்லாம் வேண்டமுற்படுமுன் ஐயம் எழுகிறது.

योगक्षेम धुरंधरस्य सकल श्रेयःप्रदोद्योगिनो
दृष्टादृष्ट मतोपदेशकृतिनो बाह्यान्तर व्यापिनः ।
सर्वज्ञस्य दयाकरस्य भवतः किं वेदितव्यं मया
शंभो त्वं परमान्तरंग इति मे चित्ते स्मराम्यन्वहम् ॥ ३५ ॥

யோகக்ஷேமதுரந்தரஸ்ய ஸகலஶ்ரேய: ப்ரதோத்யோகிநோ
த்ருஷ்டாத்ருஷ்ட மதோபதேஶக்ருதிநோ பாஹ்யாந்தர வ்யாபிந: ।
ஸர்வஜ்ஞஸ்ய தயாகரஸ்ய பவத: கிம் வேதிதவ்யம் மயா
ஶம்போ த்வம் பரமாந்தரங்க இதி மே சித்தே ஸ்மராம்யந்வஹம் ॥ 35॥

இதுவரை கிட்டாத நலப்பொருளேத் தேடிப்பெறுவது யோகம். கிட்டியதைக் காப்பாற்றிப் பயன்படுத்துவது க்ஷேமம். எது நல்லதோ அதனே என்னே அடையச் செய்வீராக! 'யத் பத்ரம் தந்ம ஆஸுவ' என்று வேண்டி யோகத்தையும் க்ஷேமத்தையும் வகிக்கிற பொறுப்பை ஈசனிடம் தந்தால் அவர் ஏற்க முன் நிற்பார். (யோகக்ஷேம துரந்தரஸ்ய.) இம்மையிலும் மறுமையிலும் நன்மைகளனைத்தையும் தருவதிலேயே முழுவதும் ஈடுபடுபவர். (ஸகல ஶ்ரேய: ப்ரத உத்யோகிந:) நாம்

கண்டவற்றிலும் காணுதவற்றிலும் உள்ள உண்மை நிலையைச் சுட்டிக் காட்டுகிற 'குருவானவர்' (த்ருஷ்டாத்ருஷ்ட மத உபதேசக்ருதிந:) உள்ளேயும் வெளியேயும் நடப்பதை யறிய உள்ளும் புறமும் பரவிநிற்பவர். (பாஹ்ய ஆந்தர வ்யாபிந:) எல்லாமறிந்தவர். (ஸர்வஜ்ஞஸ்ய) தயை புரிபவர் (தயாகரஸ்ய) இத்தகைய உம்மிடம் என்னுல் தெரிவிக்கப்பட வேண்டியது என்ன உள்ளது? (பவத: மயா வேதிதவ்யம் கிம்?) சம்புவே ! நீர் என் ஆத்மாவானதால் என்னிடம் மிக மிக நெருங்கியவர் என்ற ஒன்றை மட்டும் நாள்தோறும் மனத்தில் கொண்டுள்ளேன். ''வேண்டத் தக்கதறிவோய் நீ. வேண்ட முழுதும் தருவோய் நீ.'' (ஶம்ப்போ த்வம் பரமாந்தரங்க இதி மே சித்தே அந்வஹம் ஸ்மராமி)

தூயதொன்றே நல்லதை ஏற்கும். தூய்மையின்மையை அகற்றியபின்னரே சிறப்பம்சங்களை ஏற்றமுடியும். சாக்கடை நீரில் சந்தனம் கலந்தால் அதுவும் சேருகும். அதனுல் எந்த நற்பணியைத் தொடங்கினுலும் தூய்மையின்மையை அகற்றித் தூய்மையைத் தருகிற புண்யாஹவாசனம் செய்வர். வழிபடுபவன் சூழலைத் தூய்மைப்படுத்துகிற புண்யாஹவாசன முறை இது.

भक्तो भक्तिगुणावृते मुदमृतापूर्णे प्रसन्ने मनः-
कुंभे सांब तवांघ्रिपल्लवयुगं संस्थाप्य संवित्फलम्।
स त्वन्मन्त्र मुदीरयन्निजशरीरागार शुद्धिं वहन्
पुण्याहं प्रकटीकरोमि रुचिरं कल्याण मापादयन्॥ ३६॥

பக்தோ பக்திகுணாவ்ருதே முதம்ருதாபூர்ணே ப்ரஸந்நே மந:-
கும்ப்பே ஸாம்ப தவாங்க்ரிபல்லவயுகம் ஸம்ஸ்த்தாப்ய ஸம்வித்ப்பலம்।
ஸ த்வன் மந்த்ர முதீரய ந்நிஜஶரீராகார ஶுத்திம் வஹந்
புண்யாஹம் ப்ரகடீகரோமி ருசிரம் கல்யாண மாபாதயந் ॥ 36 ॥

(ஸாம்ப) அம்மையுடன் இருப்பவரே ! உம்மிடம் அன்பு பூண்ட நான் பக்தன். தெளிந்த மனமாகிற குடத்தின் மீது பக்தியாகிற நூல்சுற்றி ஸந்தோஷமாகிற நீர் நிறைத்து, உம் திருவடிகளாகிற மாவிலை வைத்து, ஞானத் தேங்காய் மேல் வைத்து உமது மந்திரமோதி என் சரீரமாகிய வீட்டைத் தூய்மைப்படுத்தி மனம் விரும்பியபடி அனைத்தையும்

*மங்களமாக்கிப் புண்யாஹமானதை உலகிற்கு அறிவிக்கிறேன்.* (ஸ பக்த:, (அஹம்) - பக்திகுணாவ்ருதே முதம்ருதாபூர்ணே, ப்ரஸன்னே மந: கும்ப்பே தவாங்க்க்ரிபல்லவயுகம் ஸம்வித் ப்பலம் ச ஸம்ஸ்த்தாப்ய, த்வந்மந்த்ர முதீரயன் நிஜஶரீராகார ஶுத்த்திம் வஹன், ருசிரம் கல்யாணம் ஆபாதயன் புண்யாஹம் ப்ரகடீகரோமி.)

आम्नायांबुधि मादरेण सुमन स्सङ्घास्समुद्यन्मनो-
मन्थानं दृढभक्तिरज्जुसहितं कृत्वा मथित्वा ततः ।
सोमं कल्पतरुं सुपर्व सुरभिं चिन्तामणिं धीमतां
नित्यानन्द सुधां निरन्तर रमा सौभाग्य मातन्वते ।। ३७ ।।

ஆம்நாயாம்புதி மாதரேண ஸுமநஸ்ஸங்க்காஸ் ஸமுத்யந்மநோ
மந்த்தாநம் த்ருடபக்திரஜ்ஜுஸஹிதம் க்ருத்வா மதித்வா தத:।
ஸோமம் கல்பதரும் ஸுபர்வ ஸுரபிம் சிந்தாமணிம் தீமதாம்
நித்யாநந்த ஸுதாம் நிரந்தர ரமா ஸௌபாக்ய மாதந்வதே ॥ 37 ॥

*தேவர்கள் அமுதம்பெறப் பாற் கடலைக் கடைந்ததுபோல் நல்லறிவாளர்கள் கூடி திடமான பக்தி எனும் கயிற்றில் பிணைத்த நன்முயற்சியுள்ள மனத்தை மத்தாக்கி வேதமெனும் கடலை நம்பிக்கையுடன் கடைந்து அதிலிருந்து (பலவற்றைப் பெற்றனர்).* (ஸுமநஸ்ஸங்க்கா: த்ருடபக்தி ரஜ்ஜுஸஹிதம் ஸமுத்யந்மநோ மந்த்தானம் க்ருத்வா ஆம் நாயாம்புதிம் மதித்வா தத:) (பாற்கடலைக் *கடைந்த தேவர்கள் ஸோமனையும் (சந்திரனையும்) கல்பகதருவையும் காம தேனுவையும் சிந்தாமணியையும் அமுதத்தையும் லக்ஷ்மியையும் தனித்தனியே பெற்றனர்.* நல்லறிவாளர்களோ ஸோமராகவும் (*உமையுடன் கூடியவராகவும்) கல்பதருவாகவும் காமதேனுவாகவும் சிந்தா மணியாகவும் செயல்படுகிறவரும் அறிவாளிகளுக்கு நித்யானந்தமாகிய அமுதமானவரும் இடையறாத மோக்ஷலக்ஷ்மியின் மாங்கலிய பாக்யமுமான பரமசிவனைப் பெறுகின்றனர். தேவர்கள் பெற்றது ஒரேபலனைத் தருகிற பல. அறிவாளிகள் பெற்றதோ பல நன்மைகள் நிரம்பியதொன்றை.* ஸோமம் கல்பதரும் ஸுபர்வஸுரபிம் சிந்தாமணிம் தீமதாம் நித்யாநந்த ஸுதாம் நிரந்தர ரமா ஸௌபாக்யம் ஆதந்வதே

*பக்தர் நிலையில் அனுபூதியுடன் பகவானுடன் உறவாடித்*

*துதித்து வந்த ஆசாரியர். அனுபூதியின் எக்களிப்பில் கவியாகி சிலேடை புனைகிறார். வேதத்தைக் கடைந்தெடுத்து தத்துவ நிலைகண்ட பெரியோர்களையும் பாற்கடலைக் கடந்து அமுதம் பெற்ற தேவர்களையும் சிலேடையில் பொருத்திப்பார்த்த ஆசாரியர் சிவபெருமானுடன் சந்திரனையும் சிலேடையால் பொருத்திப்பார்க்கிறார். ஸம்ஸ்கிருதமொழி இதற்குப் பெரிதும் உதவுகிறது.*

**प्राक्पुण्याचल मार्गदर्शित सुधामूर्तिः प्रसन्नश्शिवः**
**सोमस्सद्गुण सेवितो मृगधरः पूर्णस्तमोमोचकः ।**
**चेतः पुष्कर लक्षितो भवति चेदानन्दपाथो निधिः**
**प्रागल्भ्येन विजृंभते सुमनसां वृत्तिस्तदा जायते ॥ ३८ ॥**

**ப்ராக்புண்யாசல மார்கதர்ஶித ஸுதாமூர்தி: ப்ரஸந்நஶ் ஶிவ:**
**ஸோமஸ் ஸத்குண ஸேவிதோ ம்ருகதர: பூர்ணஸ்தமோ மோசக: ।**
**சேத: புஷ்கர லக்ஷிதோ பவதி சேதாநந்தபாதோ நிதி:**
**ப்ராகல்ப்யேந விஜ்ரும்பதே ஸுமநஸாம் வ்ருத்திஸ்ததா ஜாயதே ॥**

*கிழக்கு திக்கிலுள்ள புனிதமான உதயகிரியின் மீதுள்ள பாதையில் காணப்படுகிற அமிருதகிரணவடிவிலுள்ளவர் சந்திரன். முன்பிறவியில் செய்த மலைபோன்ற புண்ணியத்தின் துணை கொண்டு காணப்படுகிற அமுதவடிவினர் சிவ பெருமான்.* **(ப்ராக் புண்யாசல மார்க்க தர்ஶித ஸுதாமூர்த்தி:)** *தெளிவும் மகிழ்ச்சியும் நிரம்பியவர் சந்திரனும் சிவனும்* **(ப்ரஸன்ன:)** *அக்னியின் தாபத்திற் கெதிரான குளிர்ச்சியை வெளியிடுவதால் ஸோமனென சந்திரன். உமையுடன் காட்சிதருவதால் ஸோமனென சிவன்* **(ஸோம:)** *சிறந்த ஸத்வகுண முள்ளவர்களால் ஸேவிக்கப்படுபவர் இருவருமே* **(ஸத் குணஸேவித:)** *மானை அடையாளமாகக் கொண்டவர் சந்திரன். மானை இடதுகை விரலில் தாங்குபவர் சிவன்.* **(ம்ருகதர:)** *பதினாறு கலைகளும் எப்போதும் கொண்ட சந்திரனும் முழுமுதற்பொருளான சிவனும் பூர்ணர்.* **(பூர்ண:)** *தன் தண்ணொளியால் இருட்டிலிருந்து விடுபடச் செய்கிற சந்திரனும் தமோகுணத்திலிருந்து விடுவிப்பவரான சிவனும் இருள் நீக்குபவர்.* **(தமோமோசக:)** *மனமாகிய வானத்தில் மனத்தின் தேவதையாக விளங்கும் சந்திரன். மனமாகிய பெருவெளியில்*

*உணரப்பெறுபவர் சிவன்.* (சேத: புஷ்கரலக்ஷித: பவதிசேத்) *இவ்வாறு சந்திரனுகிய சிவன் காணப்பெற்ருல் பேரானந்தம் கடலாகக் கொந்தளிக்கும். நறுமணப்பூக்களும் நல்மன முள்ளவர்களும் மலர்ச்சி பெறுவர்* (ஆநந்தாம்ப்போநிதி: விஜ்ரும்ப்பதே. ப்ராகல்ப்ப்யேந ஸுமநஸாம் வ்ருத்தி: ஜாயதே)

*நற்குணமிக்க பெரியோர்கள் முன் செய்த புண்ணியத்தின் பயனுகத் தெளிந்த சித்தத்தில் பிரதிபலிக்கிற சிவபெருமானைக் கண்டு, அமுதகிரணனுன பூர்ண சந்திரனை தெளிந்தவானில் கண்டதைப்போல் உணர்ந்து பேரானந்தத்தில் மூழ்கி நல்ல தொரு சித்தப்போக்கைப் பெறுகிருர்கள். இது சிலேடை உணர்த்துகிற பொருள்.*

*என் மனத்தை ராஜ ராஜனுன பரமேசுவரரின் ஆளுகைக்கு உட்படுத்தியதும் மனமாகிய நாட்டில் ஏற்பட்டுள்ள மாறுதல்கள் அனந்தம்.*

**धर्मो मे चतुरंघ्रिकस्सुचरितः पापं विनाशं गतम्**
**काम क्रोध मदादयो विगलिताः कालाः सुखाविष्कृताः ।**
**ज्ञानानन्द महौषधिः सुफलिता कैवल्यनाथे सदा**
**मान्ये मानसपुण्डरीक नगरे राजावतंसे स्थिते ।। ३९ ।।**

**தர்மோ மே சதுரங்க்ரிகஸ் ஸுசரித: பாபம் விநாஶம் கதம்**
**காம க்ரோத மதாதயோ விகலிதா: காலா: ஸுகாவிஷ்க்ருதா: ।**
**ஜ்ஞாநாநந்த மஹௌஷதி: ஸுபலிதா கைவல்யநாதே ஸதா**
**மாந்யே மாநஸபுண்டரீக நகரே ராஜாவதம்ஸே ஸ்த்திதே ॥ 39 ॥**

*உடல் - உலக - பந்தமற்ற ஆத்ம நிலைக்கு உடைமை யாளரான பரமேச்வரன் என் மனத்தாமரையாகிய மாநகரில் எப்போதும் பெருமதிப்புக்குரிய அரசர்க்கரசராக ஆனதும்,* (கைவல்யநாதே மாநஸ புண்டரீக நகரே ஸதா மான்யே ராஜாவதம்ஸே ஸ்த்திதே) *என் தர்மமானது தவம் தூய்மை தயை ஸத்யம் என்ற நான்கு பாதங்களுடன் நடைமுறையில் உள்ளது.* (மே தர்ம: சதுரங்க்க்ரிக: ஸுசரித:) *என் பாபம் மறைந்து விட்டது.* (பாபம் விநாஶம் கதம்) *காமம் கோபம் திமிர் முதலியவை நலிந்துவிட்டன. சூழ்நிலையும் பருவங்களும் சுகம் தருகின்றன.* (காமக்ரோத மதாதய: விகலிதா:. காலா: ஸுகாவிஷ்க்ருதா:)

*ஞானமும் ஆனந்தமுமாகிய ஒஷதிச்செடி பூத்துக் காய்த்துப் பழுத்து நிறைந்து நிற்கிறது.* **(ஜ்ஞானாநந்த மஹௌஷதி: ஸுபலிதா)**

*ஞானப்பயிர் முளைத்துக் காய்த்துப் பழுத்தவிதம் பின்வருமாறு.*

**धीयन्त्रेण वचोघटेन कविताकुल्योपकुल्याक्रमैः**
**आनीतैश्च सदाशिवस्य चरितांभोराशि दिव्यामृतैः ।**
**हृत्केदार युताश्च भक्तिकलमाः साफल्य मातन्वते**
**दुर्भिक्षान्मम सेवकस्य भगवन् विश्वेश भीतिः कुतः ॥ ४० ॥**

தீயந்த்ரேண வசோகடேந கவிதா குல்யோ பகுல்யாக்ரமை:
ஆநீதைஶ்ச ஸதாஶிவஸ்ய சரிதாம்போராஶி திவ்யாம்ருதை: ।
ஹ்ருத்கேதார யுதாஶ்ச பக்திகலமா: ஸாபல்ய மாதந்வதே
துர்பிக்ஷாந் மம ஸேவகஸ்ய பகவந் விஶ்வேஶ பீதி: குத: ॥ 40 ॥

*பகவானே!* **(பகவன்!)** *உலகின் ஈசனே!* **(விஶ்வேஶ!)** *உன் பணியாளனுகிய எனக்கு துர்பிக்ஷத்திலிருந்து இனிபயம் எதற்கு?* **(ஸேவகஸ்ய மம துர்பிக்ஷாத் குத: பீதி:?)** *இதயமாகிற வயலில் பக்தி எனும் பயிர்கள் முளைத்து விட்டன.* **(பக்திகலமா: ஹ்ருத்கேதாரயுதா:)** *புத்தியாகிய ஏற்றம் பூட்டி வாக்காகிற சால் இணைத்து, எப்போதும் மங்களமான ஸதா சிவமான உமது சரிதக் கடலின் திவ்ய அமுத நீரை இறைத்துக் கவிதையாகிற பெருவாய்க்கால் சிறுவாய்க்கால்கள் வழியே நீர் பாய்ச்சியதால்,* **(தீயந்த்ரேண வசோகடேந கவிதா குல்யோபகுல் யாக்ரமை: ஸதா ஶிவஸ்ய சரிதாம் ப்போராஶி திவ்யா ம்ருதை: ஆநீதை:)** *இப்போது கதிர்விட்டுத் தான்யங்கள் நிறைந்து விட்டன.* **(ஸாபல்ய மாதன்வதே.)** *பசியாறத் தானிய நிறைவு பெற்றதும் துர்பிக்ஷம் எங்கே?*

*என் மனமாகிய ராஜ்யத்திற்கு அரசரான நீர் என் கண்காது முதலிய உமது பணியாட்களை உசிதப்படி ஏவுவது இனி உம் பொறுப்பில். இந்த பணியாட்களோ உமது ஏவலை எதிர்பார்த்து நிற்கின்றனர். உத்தரவு பெறுவதில் தாமதம் பொறுக்காமல் அவை என்னை உம்மிடம் விண்ணப்பிக்கும்படி கோருகின்றனர்.*

पापोत्पात विमोचनाय रुचिरैश्वर्याय मृत्युंजय
स्तोत्र ध्यान नति प्रदक्षिण सपर्यालोकनाकर्णने।
जिह्वा चित्त शिरोङ्घ्रि हस्त नयन श्रोत्रै रहं प्रार्थितो
मामाज्ञापय तन्निरूपय मुहु र्मामेव मा मेऽवचः ॥ ४१ ॥

பாபோத்பாத விமோசநாய ருசிரைஶ்வர்யாய ம்ருத்யுஞ்ஜய
ஸ்தோத்ரத்த்யாநநதி ப்ரதக்ஷிண ஸபர்யாலோகநாகர்ணநே ।
ஜிஹ்வா சித்த ஶிரோங்க்ரி ஹஸ்த நயந ஶ்ரோத்ரை ரஹம் ப்ரார்த்திதோ
மாமாஜ்ஞாபய தந்நிரூபய முஹு ர்மாமேவ மா மேऽவச: ॥ 41 ॥

*எனது நாக்கும் சித்தமும் சிரசும் கால்களும் கைகளும் கண்களும் காதுகளும் வரிசையாக முன்நின்று உம்மைத் துதிக்கவும் தியானிக்கவும் வணங்கவும் வலம் வரவும் வழிபடவும் காணவும் உமது கதைகளைக் கேட்கவும் தம்மை முறையே ஈடுபடுத்தும்படி என்னிடம் கோருகின்றன.* (ஜிஹ்வா சித்த ஶிரோ - அங்க்ரி - ஹஸ்த - நயந ஶ்ரோத்ரை: ஸ்தோத்ரத்த்யானநதிப்ரதக்ஷிண ஸபர்யா ஆலோகந ஆகர்ணநே நியோஜநாய அஹம் ப்ரார்த்தித:) *மரணத்தை வென்றவரே, யமனை வென்றவரே!* (ம்ருத்யுஞ்ஜய) *பாபத்திலிருந்தும் பாபத்தின் பின் விளைவான துயரங்களிலிருந்தும் விடுபடுவதற்காகவும், கட்டுகள் நீங்கி செய்யத்தக்கதைச் செய்கிற இனிய சுதந்திரம் (ஆளுமை) பெறுவதற்காகவும் இந்தக் கோரிக்கை.* (பாபோத்பாத விமோசநாய ருசிரைஶ்வர்யாய) *என்னைக் கட்டளையிடுவீர். அடிக்கடி இதற்கான வழி காட்டுவீர்.* (மாம் ஆஜ்ஞாபய, மாமேவ தத் முஹுர்நிரூபய) *என்னிடம் பராமுகமாக மௌனமாக இருக்காதீர்* (மா மே அவச:) *என் பொறிகள் அனைத்தும் உம்மைப் புலனாகக் கொள்ளட்டும். மற்ற வெளிப்பொருள் எதுவும் புலப்படாமலிருக்கட்டும். இவ்வாறு அருள்புரிவதோடு, நான் தவறும் போது கட்டளையிட்டு என்னைத் திருத்துவீர்.*

*காலையில் பூச்செடியினருகில் நிற்கும் போது அது பறிப்பவனைக் கெஞ்சிக்கேட்கும். ''நானே ஈசனைச் சென்றடைய இயலாது. நான் ஈசனுக்காகவே மலர்ந்துள்ளேன். அது தான் எனது குறிக்கோள். அதற்கு உதவ உன்னால் தான் முடியும். என்னைப் பறித்து இறைவனது திருவடிகளில் அர்ப்பணம் செய்.*

உனக்குப் புண்ணியம் உண்டு'' என. இலையும் பூவும் பழமும் இறைவனுடையவை. அவனுக்காகவே தோன்றியவை. தானே சென்றடைய இயலாமையை மனிதன் மாற்றிப் பக்தியுடன் அவற்றைச் சேர்ப்பித்து அவைகளுடன் தானும் கடைத் தேறுகிறான். கண்ணும் காதும் கூட மனத்தின் உதவியை அவ்வாறு நாடி இறையனுபவம் பெறுவதை ஆசாரியர் விளக்கியுள்ளார்.

தன் மனத்தில் இறைவனை வாசம் புரியும்படி வேண்டுபவன் மனம் அதற்கேற்றதா? என்று ஈசன் சிந்திக்க இடம் தராமல் வெவ்வேறு யுக்திகளைக் காட்டி மனத்திற் குடிகொள்ள வேண்டுகிறான்.

गांभीर्यं परिखापदं घनधृतिः प्राकार उद्यद्गुण-
स्तोमश्चाप्तबलं घनेन्द्रियचयो द्वाराणि देहे स्थितः ।
विद्या वस्तु समृद्धि रित्यखिल सामग्री समेते सदा
दुर्गातिप्रिय देव मामक मनो दुर्गे निवासं कुरु ॥ ४२ ॥

காம்பீர்யம் பரிகாபதம் க்கநத்ருதி: ப்ரகார உத்யத்குண-
ஸ்தோமஶ்சாப்தபலம் க்கநேந்த்ரியசயோ த்வாராணி தேஹே ஸ்தித: ।
வித்யா வஸ்து ஸம்ருத்தி ரித்யகில ஸாமக்ரீ ஸமேதே ஸதா
துர்காதிப்ரிய தேவ மாமக மநோ துர்கே நிவாஸம் குரு ॥ 42 ॥

தேவனே! உமக்குக் கோட்டையில் அதிக நாட்டம் உண்டு. (தேவ ! துர்காதிப்ரிய !) அரசனுக்குத் தக்கபாதுகாப்புத் தருவது கோட்டை. (அரண்). என்மனமே ஓர் அரும்கோட்டை. அதில் குடியிருப்பீர். (மாமகமநோ துர்கே நிவாஸம் குரு.) மனத்தின் ஆழங்காண முடியாத இயல்பே அகிழ். (அகழி) (காம்பீர்யம் பரிகாபதம்) திடமான தைரியமே மதிற்சுவர். (கநத்த்ருதி: - ப்ராகார:) எப்போதும் மேலோங்கி நிற்கின்ற குணச் சிறப்பே நண்பர்படை. (உத்யத் குணஸ்தோம: ஆப்த பலம்.) உடலில் நெருக்கத்துடன் உதவுகிற கண்முதலிய பொறிகளே கோட்டை வாயில்கள் (தேஹே ஸ்த்தித: கநேந்த்ரியசய: த்வாராணி) கல்வி பொருளாதாரச் செழிப்பு. (வித்யா வஸ்துஸம்ருத்த்தி:) என்றிவ்வாறு எல்லா சாதனங்களும் நிரம்பிய என் மனக்கோட்டையில் எப்போதும் வசிப்பீர். (இதி அகில ஸாமக்ரீ ஸமேதே மாமகமநோதுர்கே ஸதா நிவாஸம் குரு).

*ஸாதகன் தன் மனத்தைச் சபலமற்று ஆழ்ந்த சிந்தனை யுள்ளதாக உறுதிமிக்கதாக, குணச் சிறப்புள்ளாதாக, இந்திரியங்களைத் தன் வசத்தில் கொண்டதாக, பிரும்ம வித்யையாகிற பரவித்யையிலும் வேதம் முதல் உலகியல் வரையுள்ள அபர வித்யையிலும் தேர்ச்சி பெற்றதாகப் பண்படுத்த இறைவன் அதில் நித்யவாஸம் செய்வான்.*

**मा गच्छ त्वमितस्ततो गिरिश भो मय्येव वासं कुरु**
**स्वामिन्नादिकिरात मामकमनः कान्तार सीमान्तरे ।**
**वर्तन्ते बहुशो मृगा मदजुषो मात्सर्य मोहादयः**
**तान् हत्वा मृगया विनोद रुचितालाभं च संप्राप्स्यसि ॥ ४३ ॥**

**மா கச்ச த்வ மிதஸ்ததோ கிரிஶ போ மய்யேவ வாஸம் குரு**
**ஸ்வாமிந்நாதிகிராத மாமகமந: காந்தார ஸீமாந்தரே ।**
**வர்தந்தே பஹுஶோ ம்ருகா மதஜுஷோ மாத்ஸர்ய மோஹாதய:**
**தாந் ஹத்வா ம்ருகயா விநோத ருசிதாலாபம் ச ஸம்ப்ராப்ஸ்யஸி**

*இறைவ ! உமக்குப் பொழுது போக்கு தேவை. அது இங்கு மட்டுமே உள்ளது. மலையில் வாழ்பவரே !* **(கிரிஶ !)** *என் உடைமையாளரே !* **(ஸ்வாமின் !)** *ஆதிவேடரே !* **(ஆதிகிராத)** *இங்கிருந்து வேறெங்கும் செல்லாதீர் !* **(த்வம் இத: தத: மாகச்ச)** *என்னிடமே வசிப்பீர்.* **(மய்யேவ வாஸம் குரு)** *என்மனமாகிய காட்டின் எல்லைக்குள் பொறாமை, மதிமயக்கம் முதலிய திமிர் பிடித்த பல விலங்குகள் உள்ளன.* **(மாமக மந: காந்தார ஸீமாந்தரே மாத்ஸர்ய மோஹாதய: மதஜுஷ: ம்ருகா: பஹுஶோ வர்தந்தே)** *அவற்றைக் கொன்று வேட்டையாடிப் பொழுது போக்குவதால் ஏற்படுகிற பல்சுவையனுபவம் பெறுவீர்.* **(தான் ஹத்வா ம்ருகயா விநோத ருசிதா லாபம்ச ஸம்ப்ராப்ஸ்யஸி.)**

*அர்ஜுனன் பாசுபதாஸ்திரம் பெறத்தவமிருந்தபோது வேடுவனைகப் பெற்ற அனுபவம் இப்போது உமக்கு உதவும். ஆதிகிராத ! . முன்னரே வேடனாக இருந்திருக்கிறீர். ருத்திரமும் ம்ருகயு - மானை வேட்டையாடுபவர் என உம்மை வணங்கும். வேடரே சிங்கமாகவும் காட்சி தருகிறீர். (சிலேடை)*

**करलग्नमृगः करीन्द्र भंगो घनशार्दूल विखण्डनोऽस्त जन्तुः ।**
**गिरिशो विशदाकृतिश्च चेतः कुहरे पंचमुखोऽस्ति मे कुतो भीः ॥ ४४ ॥**

கரலக்நம்ருக: கரீந்த்ர பங்கோ கநபார்தூல விகண்டநோஸ்த ஜந்து: ।
கிரிபோ விபதாக்ருதிப்ச சேத: குஹரே பஞ்சமுகோஸ்தி மே குதோபீ:

என் இதய வெளியில் ஒரு பஞ்சமுகர் உள்ளார். (பஞ்ச என்ற சொல் ஐந்து, அகன்ற என்று இருபொருள் கொண்டது. சிவபெருமான் ஸத்யோஜாதம் வாமதேவம் அகோரம் தத்புருஷம் ஈபாநம் என ஐந்து முகம் கொண்டவரானதால் பஞ்சமுகர். அகன்ற வாயுள்ளதால் சிங்கமும் பஞ்சமுகம் அதனால் சிலேடை) எனக்கு எதிலிருந்து பயம்? (சேத: குஹரே பஞ்சமுகோ-ஸ்தி. மே பீ: குத:?) கையில் மான் கோர்த்துள்ளவர். (சிங்கத்தின் முன்னங்கால் மானை அறைந்து பிடித்துக் கொண்டிருக்கும். சிவனுக்கு விரல் நுனியில் மான்) (கரலக்நம்ருக:) பெரு யானையைக் கொன்றவர். சிங்கம் யானையைக் கொல்லும். சிவபெருமான் கஜமுகாஸுரனைக் கொன்று அதன் தோலை உடலில் போர்த்தியவர் (கரீந்த்ர பங்க:) கொடிய புலியைப் பிளந்தவர். சிங்கம் புலியைக் கிழித்து கொல்லும். சிவனே தாருகாவனத்து ருஷிகள் அபிசார முறையில் அனுப்பிய புலியைக் கிழித்துத் தோலை இடுப்பில் கட்டியவர். (கநபார்த்தூல விகண்டந:) । பிராணிகளை அழிப்பவர். சிங்கம் மிருகங்களை வேட்டையாடி அழிக்கும். சிவனே எல்லா உயிரினங்களையும் பிரளயத்தில் தன்னில் லயமடைவித்து மறைப்பவர். (அஸ்த ஜந்து:) மலையில் வாழ்பவர் சிங்கமும் சிவனும். (கிரிப:) பளிச்செனப் புலப்படுகிற வடிவம் கொண்டவர். சிங்கம் தூரத்திலிருந்தால் கூட நன்கு புலப்படும். சிவனோ தூய வெண்ணிறம் கொண்டவர். (விபதாக்ருதி:)

छन्दश्शाखि शिखान्वितै र्द्विजवरैः संसेविते शाश्वते
सौख्यापादिनि खेदभेदिनि सुधासारैः फलै र्दीपिते।
चेतः पक्षिशिखामणे त्यज वृथा संचार मन्यै रलम्
नित्यं शङ्कर पादपद्म युगली नीडे विहारं कुरु ।। ४५ ।।

சந்தப்பாகி பிகாந்விதைர்த்விஜவரை: ஸம்ஸேவிதே பாப்வதே
ஸௌக்யாபாதிநி கேதபேதிநி ஸுதாஸாரை: பலைர்தீபிதே ।
சேத: பக்ஷிபிகாமணே த்யஜ வ்ருதா ஸஞ்சார மந்யை ரலம்
நித்யம் பங்கர பாதபத்ம யுகலீ நீடே விஹாரம் குரு ॥ 45 ॥

என் மனமே ! நீ ஒரு அழகிய பறவை. பறவைகளில் சிறந்ததும் கூட. (சேத: பக்ஷி ஶிகாமணே !) அழகிய கூடு ஒன்று உள்ளது. அதனுள் பொழுது போக்குவாய். அந்தக் கூடு. வேதத்தின் கிளேகளாகிற ருக்வேதம் முதலிய கிளைகளும் உபநிஷதம் முதலிய உச்சிக்கிளேகளும் கற்று அவற்றில் ஈடுபட்ட அந்தணர்களாகிற பறவைகள் குடியிருக்குமிடம் (ச்சந்தஶ் ஶாகி ஶிகாந்விதை: த்விஜவரை: ஸம்ஸேவிதே) (அந்தணர்களும் இருபிறப்பாளர்கள். தாயிடமிருந்தும் உபனயனத்தின் மூலமும் இருமுறை பிறந்தவர்கள், முட்டையாக வெளிவந்து பொரிந்து குஞ்சானதால் பறவைகளும் இருபிறவியாளர்கள். அதனுல் த்விஜர்கள்.) நிலேத்திருப்பது (ஶாஶ்வதே) சுகம் தருவது (ஸௌக்க்யாபாதிநி) துயர் துடைப்பது (க்கேத பேதிநி) அமுதச்சாறு நிரம்பிய பழங்களால் ஒளிர்வது. (ஸுதாஸாரை: ப்பலே: தீபிதே) மங்களத்தையே தருகிற சங்கரரின் இரு திருவடித் தாமரை களாகிய கூடு. (ஶங்கர பாதபத்ம யுகலீ நீடே) அதில் நாள்தோறும் பொழுது போக்குவாய். (நித்யம் விஹாரம் குரு. ) மற்றவற்றுல் பொழுதுபோக்கியது போதும். அதைவிட்டுவிடு. (வ்ருதா அன்யை: ஸஞ்சாரம் த்யஜ. அலம்.)

மனத்தைப் பறவைகளில் சிறந்ததாகக் கூறி சிவ பெருமாளுகிய கூட்டில் வசிக்கச் சொன்ஞர். அதனே அன்ன பட்சியாக நினேத்து மானஸஸரோவரத்தினருகே இறைவனின் திருமாளிகையில் கூடுகட்டி விருப்பப்படி வசிக்கச் சொல்கிருர்.சிவபெருமானிடம் எவ்வகையிலாவது மனம் பதியவேண்டும்.

आकीर्णे नखराजि कान्ति विभवैरुद्यत्सुधावैभवैः
आधौतेऽपि च पद्मरागललिते हंसव्रजैः आश्रिते ।
नित्यं भक्ति वधूगणैश्च रहसि स्वेच्छाविहारं कुरु
स्थित्वा मानस राजहंस गिरिजानाथांघ्रिसौधान्तरे ॥ ४६ ॥

ஆகீர்ணே நகராஜி காந்தி விபவைருத்யத்ஸுதாவைபவை:
ஆதௌதேऽபி ச பத்மராகலலிதே ஹம்ஸவ்ரஜை: ஆஶ்ரிதே ।
நித்யம் பக்தி வதூகணைஶ்ச ரஹஸி ஸ்வேச்சா விஹாரம் குரு
ஸ்த்தித்வா மாநஸ ராஜஹம்ஸ கிரிஜாநாதாங்க்ரி ஸௌதாந்தரே॥ 46 ॥

மனமாகிய ராஜஹம்ஸமே ! பக்தியாகிய அன்னப் பேடுகளுடன், மலைமகளின் மணாளனின் திருவடிகளாகிற மாளிகையில் நடுக்கூடத்தில் சுயேச்சையாகத்தனிமையில் பொழுது போக்கு வாய் ! (மாநஸ ராஜஹம்ஸ ! பக்திவதூகணை: கிரிஜா நாதாங்க்ரி ஸௌதாந்தரே ஸ்த்தித்வா ரஹஸி ஸ்வேச்சா விஹாரம் குரு.) அங்கே மற்றும் பல ராஜ ஹம்ஸங்கள் உள்ளன. அம்மாளிகை இவற்றின் சிவந்த நகவரிசைகளின் ஒளியலையால்நிறைந்தது. அமுதகலையால் எங்கும் சூழப்பெற்று சுண்ணும்புப்பூச்சு பெற்றது போல் உள்ளது. பத்மராகம் போன்று சிவந்து அழகானது. ஹம்ஸக்கூட்டத்தால் சுற்றிலும் சூழப்பெற்றது. உத்யத்ஸுதா வைபவை: நகராஜிகாந்தி விபவை: ஆகீர்ணே. ஆதௌதே பத்மராகலலிதே. ஹம்ஸவ்ரஜை: ஆச்ரிதே. அதில் நிம்மதியுடன் பொழுது போக்குவாய். உன்னைப்போன்று பலர் அங்கு உள்ளதைப்பார்.

शंभुध्यान वसन्त संगिनि हृदारामेऽघजीर्णच्छदाः
स्रस्ता भक्तिलताच्छटा विलसिताः पुण्यप्रवाल श्रिताः ।
दीप्यन्ते गुणकोरका जपवचः पुष्पाणि सद्वासना
ज्ञानानन्द सुधा मरन्द लहरी संवित्फलाभ्युन्नतिः ॥ ४७ ॥

ஶம்புத்யாந வஸந்த ஸங்கிநி ஹ்ருதாராமேऽகஜீர்ணச்சதா:
ஸ்ரஸ்தா பக்திலதாச்சடா விலஸிதா: புண்யப்ரவால ஶ்ரிதா: ।
தீப்யந்தே குணகோரகா ஜபவச: புஷ்பாணி ஸத்வாஸநா
ஜ்ஞாநாநந்த ஸுதா மரந்த லஹரீ ஸம்வித்பலாப்ப்யுந்நதி: ॥ 47 ॥

சிவபெருமானின் தியானம் வஸந்தருதுபோல் இன்பமளிக்கிறது. அந்த இனிய வஸந்தத்தால் மலர்ந்துள்ள இதயம் எனும் பூந்தோட்டம். அதில் பாபமாகிற இலைகள் பழுத்துக்காய்ந்து உதிர்கின்றன. (ஶம்ப்புத்யான வஸந்த ஸங்கினி ஹ்ருதாராமே அகஜீர்ணச்சதா: ஸ்ரஸ்தா:) பக்தி எனும் படர்க் கொடிகள் மலர்ந்துள்ளன. புண்யமெனும் துளிர்களை ஒட்டிய குணங்கள் என்ற மொட்டுகள் ஒளிர்கின்றன. (பக்திலதாச் சடா விலஸிதா: புண்யப்ரவாளஶ்ரிதா: குணகோரகா: தீப்யந்தே.) ஜபிக்கிற மந்திரங்களாகிய பூக்கள் நல்லெண்ணப் பதிவாகிய நறுமணம், ஞானமும் ஆனந்தமுமாகிய அமுதத்தேனின் பெருக்கு, (ஜபவச: புஷ்பாணி, ஸத்வாஸநா ஜ்ஞாநாநந்த ஸுதா மரந்தலஹரீ,) சுத்தசைதன்யமாகிற பேரறிவு எனும் உயர்ந்தகனி (ஸம்வித்ப்பலாப் புயுந்நதி: ।) இவை பிரகாசிக்கின்றன.

*மனத்தின் சபலமடங்க சிவத்தியானமென்ற குளிர்ந்த நீர் நிலையைக் காட்டி அதில் மூழ்கித் திளைக்கச் சொல்கிறார்.*

नित्यानन्द रसालयं सुरमुनि स्वान्तांबु जाताश्रयम्
स्वच्छं सद्विज सेवितं कलुषहृत् सद्वासनाविष्कृतम् ।
शंभुध्यान सरोवरं व्रज मनो हंसावतंस स्थिरं
किं क्षुद्राश्रय पल्वल भ्रमण संजात श्रमं प्राप्स्यसि ॥ ४८ ॥

நித்யாநந்த ரஸாலயம் ஸுரமுநி ஸ்வாந்தாம்பு ஜாதாஶ்ரயம்
ஸ்வச்சம் ஸத்த்விஜ ஸேவிதம் கலுஷஹ்ருத் ஸத்வாஸநாவிஷ்க்ருதம் ।
ஶம்புத்த்யாந ஸரோவரம் வ்ரஜ மநோ ஹம்ஸாவதம்ஸ ஸ்த்திரம்
கிம் க்ஷுத்ராஶ்ரய பல்வல ப்ரமண ஸஞ்ஜாத ஶ்ரமம் ப்ராப்ஸ்யஸி ॥48॥

*மனமெனும் சிறந்த ஹம்ஸமே!* (மநோஹம் ஸாவதம்ஸ!) *சிவத்தியானம் எனும் அழகிய பொய்கையை அடைவாய்.* (ஶம்ப்பு - த்த்யான ஸரோவரம் வ்ரஜ) *அது நிலைத்த ஆனந்த மெனும் நீர் நிறைந்தது.* (நித்யாநந்த ரஸாலயம்.) தேவர் ருஷிகள் இவர்களின் *மனமாகிற தாமரைக்கு இருப்பிடம்* (ஸுர முனி ஸ்வாந்தாம்புஜாத ஆச்ரயம்.) *மிகத் தெளிவானது.* (ஸ்வச்சம்.) *நல்லோர்களாகிய பறவைகள் விரும்பிக் கூடுமிடம்.* (ஸத்த்விஜஸேவிதம்) *மன அழுக்கை நீக்குவது* (கலுஷ ஹ்ருத்) *நல்லெண்ணப் பதிவுகளாகிய நறுமணத்தை வெளிப்படுத்துவது.* (ஸத்வாஸநாவிஷ்க்ருதம்) *இந்தப் பொய்கையை அடைவாய். அல்லாமல் அற்பர்களை அண்டிப் பிழைப்பதாகிய குட்டையில் உழன்று உழன்று பெறும் துயரை அனுபவிக்கப் போகிறாயா? அற்பவாழ்க்கையாகிய சேறு நிரம்பிய குட்டையில் சிக்கிக் கெட்டமணத்தை நுகர்வதை விட நறுமணமிக்க சிவத்தியானமெனும் மானஸஸரோ வரத்தில் நீந்தி விளையாடலாமே.* (கிம் க்ஷுத்ராஶ்ரய பல்வலப்ப்ரமண ஸஞ்ஜாதஶ்ரமம் ப்ராப்ஸ்யஸி).

*சிவ நாமஸ்மரணமும் சிவத்தியானமும் நிலைக்கத் திடமான சித்தத்தில் பக்தி எனும் கொடி படரும். முக்தி எனும் பழம் காய்க்கும் என்கிறார்.*

आनन्दामृतपूरिता हरपदांभोजालवालोद्यता
स्थैर्योपघ्नमुपेत्य भक्तिलतिका शाखोपशाखान्विता।

उच्चैर्मानसकायमान पटलीमाक्रम्य निष्कल्मषा
नित्याभीष्टफल प्रदा भवतु मे सत्कर्मसंवर्धिता ॥ ४९ ॥

ஆநந்தாம்ருதபூரிதா ஹரபதாம்போஜாலவாலோத்யதா
ஸ்த்தைர்யோபக்க்நமுபேத்ய பக்திலதிகா ஶாகோபஶாகாந்விதா ।
உச்சைர்மாநஸகாயமாந படலீமாக்ரம்ய நிஷ்கல்மஷா
நித்யாபீஷ்டபல ப்ரதா பவது மே ஸத்கர்மஸம்வர்த்திதா ॥ 49 ॥

*பக்தி எனும் கொடி என் மனமாகிய உயர்ந்த பந்தலின் மீது படர்ந்து கப்பும் கிளையுமாக வளர்ந்து நித்திய நிலையாகிய முக்தி எனும் மிகவும் விரும்பப்பட்ட பழத்தை எனக்கு அளிக்கட்டும்.* (பக்திலதிகா உச்சை: மாநஸ காயமான படலீம் ஆக்ரம்ய ஶாகோபஶாகாந்விதா நித்ய அபீஷ்டபலப்ரதா மேபவது.) *அந்தக் கொடி வளரப் பெற்ற உதவி - சிவ பெருமானின் திருவடிகளாகிய பாத்தியில் முளைத்தது, ஆனந்தமென நீரால் பூரிப்புபெற்றது.* (ஹரபதாம்போஜ ஆலவாலோத்யதா ஆனந்தா ம்ருத பூரிதா) *பாபமாகிய குற்ற மற்றது.* (நிஷ்கல்மஷா) *செய்நேர்த்தி மிக்க புனிதப்பணிகள் என்ற உரம்பேட்டு வளர்ந்தது.* (ஸத்கர்ம ஸம்வர்த்திதா) *மனோதிடம் என்ற கொழுகம்பைச் சுற்றி நின்று அது முக்திப்பழம் தரட்டும்.* (ஸ்த்தைர்யோபக்க்நம் உபேத்ய பலப்ரதாபவது.।)

*ஸ்ரீசைலத்தில் சிவத்தியானயோகத்தால் ஸமாதி கூடிய ஆசார்யர் மீது பறவைகள் கூடுகட்டி நிம்மதியாய் வாழ்ந்தனவாம். ஸ்ரீமல்லிகேசுவரர் தான் அந்தத் தியானத்தில் மல்லிகைப்பூபோல் நறுமணத்துடன் மனத்தில் நிறைந் திருந்தவர்.*

सन्ध्यारंभ विजृंभितं श्रुतिशिरःस्थानान्तराधिष्ठितं
सप्रेम भ्रमराभिराम मसकृत् सद्वासना शोभितम् ।
भोगीन्द्राभरणं समस्त सुमनः पूज्यं गुणाविष्कृतं
सेवे श्रीगिरि मल्लिकार्जुन महालिंगं शिवालिंगितम् ॥ ५० ॥

ஸந்த்யாரம்ப விஜ்ரும்ப்பிதம் ஶ்ருதிஶிர:ஸ்த்தாநாந்த ராதிஷ்டிதம்
ஸப்ரேம ப்ரமராபிராம மஸக்ருத் ஸத்வாஸநா ஶோபிதம் ।
போகீந்த்ராபரணம் ஸமஸ்த ஸுமந: பூஜ்யம் குணாவிஷ்க்ருதம்
ஸேவே ஸ்ரீகிரி மல்லிகார்ஜுந மஹாலிங்கம் ஶிவாலிங்கிதம் ॥ 50 ॥

அர்ஜுனம் எனும் மருதமரவடிவிலிருந்த சிவபெருமானை மல்லிகைக் கொடியாகத் தேவி சுற்றிப் படர்ந்திருந்ததால் அவர் மல்லிகார்ஜுனர். பின்னர் வழிபாட்டிற்குரிய லிங்கவடிவில் தோன்றினர். அந்த சிவையால் தழுவி அணைக்கப்பெற்ற ஸ்ரீசைலத்திலுள்ள மல்லிகார்ஜுனர் என்று மஹா லிங்கவடிவான தேவரை வழிபடுகிறேன். (ஶிவாலிங்கிதம் ஸ்ரீகிரி - மல்லிகார்ஜுந மஹாலிங்கம் ஸேவே) அவர் மாலைப்பொழுது துவங்கும்போது கூத்தாடிக் களிப்பவர். (ஸந்த்த்யாரம்ப்ப விஜ்ரும்ப்பிதம்) வேதத்தின் தலைப் பகுதியான சுவேதாஶ்வதரம் முதலிய உபநிஷதங்களின் நடுவே ஆழ்ந்த கருத்தாக இருப்பவர். (ஶ்ருதிஶிரஸ் ஸ்தாநாந் தராதிஷ்ட்டிதம்.) ஆழ்ந்தகாதலுடன் மொய்த்தின்பம் பெற வண்டான பிரமராம்பிகை எனும் தேவியுடன் இணைந்த அழகர். (ஸப்ரேம ப்ரமராபிராமம்.) எப்போதும் நல்லோர்களின் பக்தி எனும் நறுமணத்தால் இனியவர். (அஸக்ருத ஸத்வாஸநா ஶோபிதம்) பாம்பணி பூண்டவர் (போகீந்த்ராபரணம்) நன்மனம் படைத்தவரனைவராலும் தேவராலும் வழிபடப்பெற்றவர். (ஸமஸ்த ஸுமந:பூஜ்யம்) பக்தர்களின் நற்குணங்களால் மகிழ்ந்து தானே தோன்றியவர். (குணாவிஷ்க்ருதம்) இவரை நான் வழிபடுகிறேன்.

தேவி பெண்வண்டாகி (பிரமராம்பிகையாக பிரமரியாக) இவரைச் சுற்றச் சிவபெருமானும் ஆண் வண்டாகப் பெண்வண்டுடன் சுற்றிச் சுற்றிவர என் மன மாகிய மகரந்தம் நிரம்பிய தாமரைப்பூ அவர் முன் தலையாட்டி வரவேற்கிறது என்கிறார் ஆசாரியர். வண்டுக்கும் சிவனுக்கும் சிலேடை.

भृंगीच्छा नटनोत्कटः करिमदग्राही स्फुरन्माधवा-
ह्लादो नादयुतो महासितवपुः पंचेषुणा चादृतः ।
सत्पक्ष स्सुमनो वनेषु स पुनः साक्षान्मदीये मनो-
राजीवे भ्रमराधिपो विहरतां श्रीशैलवासी विभुः ॥ ५१ ॥

ப்ருங்கீச்சா நடநோத்கட: கரிமதக்ராஹீ ஸ்புரந்மாதவா-
ஹ்லாதோ நாதயுதோ மஹாஸிதவபு: பஞ்சேஷுணா சாத்ருத: ।
ஸத்பக்ஷ ஸ்ஸுமநோ வநேஷு ஸ புந: ஸாக்ஷாந்மதீயே மநோ
ராஜீவே ப்ப்ரமராதிபோ விஹரதாம் ஸ்ரீஶைலவாஸீ விபு: ॥ 51 ॥

*ஸ்ரீ சைலத்திலுள்ள வண்டுகளின் தலைவரானவர் பிரமராம்பிகையின் கணவர், என் மன மாகிற வெண்தாமரையில் களிநடனம் புரியட்டும்.* (ஸ்ரீசைலவாஸீ ப்ரமராதிப: மதீயே மநோராஜீவே விஹரதாம்.) *அவர் பெண்வண்டான பிரமராம்பிகையின் விருப்பப்படி நடனம் புரிவதில் கட்டின்றி முனைந்தவர்.* (ப்ருங்கீச்சாநடநோத்கட:) *யானை (கஜமுகா ஸுரன்)யின் மதநீரை மதத்தைப் பருகுபவர்.* (கரிமதக்ராஹீ) *நன்கு புலர்ந்த வஸந்தருதுவைக் கண்டு மகிழ்ச்சியடைகின்றவர், துடிப்புடன் மோகினியாக வந்த விஷ்ணுவிற்கு ஆனந்த மளிப்பவர்* (ஸ்ப்புரன் - மாதவ - ஆஹ்லாத:) *பிரணவமாகிய ரீங்காரநாதத்துடன் இணைந்தவர்.* (நாதயுத:), *அதிகக்கருநிற முள்ளவர் (வண்டு)* (மஹா அஸிதவபு:) *மிகவும் வெண்ணிற உடலுள்ளவர் (சிவன்)* (மஹாஸிதவபு:) *மன்மதனால் மதிக்கப்பெற்றவர்* (பஞ்சேஷுணா சாத்ருத:) *நல்லோர்களைக் காப்பதில் பக்ஷபாதம் உள்ளவர். (வண்டாயின் - பூக்காட்டில் நாட்டம் உள்ளவர்)* (ஸுமநோவநேஷு ஸத்பக்ஷ:) *எங்கும் பரவியிருப்பவர்.* (விபு:) *இவர் என் மனத்தாமரையில் கேளிநடனம் புரியட்டும். மன்மதனுக்கு தன் கரும்பு வில்லின் நாணை வண்டுவரிசையில் அதிகமதிப்பு* (பஞ்சேஷுணா சாத்ருத:)

*இங்கு வண்டிற்கும் சிவனுக்கும் சிலேடை. வரும் சுலோகத்தில் மேகத்திற்கும் சிவனுக்கும் சிலேடை. மனம் சாதகபக்ஷிபோல் சிவனாகிய மேகத்தின் வரவை எதிர்பார்க்கிறது.*

**कारुण्यामृत वर्षिणं घनविपद् ग्रीष्मच्छिदा कर्मठं**
**विद्या सस्य फलोदयाय सुमनस्संसेव्य मिच्छाकृतिम् ।**
**नृत्यद्भक्त मयूरमद्रिनिलयं चंचज्जटा मण्डलम्**
**शंभो वांछति नीलकन्धर सदा त्वां मे मनश्चातकः ॥ ५२ ॥**

காருண்யாம்ருத வர்ஷிணம் கநவிபத் க்ரீஷ்மச்சிதா கர்மடம்
வித்யா ஸஸ்யப்பலோதயாய ஸுமந ஸ்ஸம்ஸேவ்ய மிச்சாக்ருதிம் ।
ந்ருத்யத்பக்த மயூர மத்ரிநிலயம் சஞ்சஜ்ஜடா மண்டலம்
ஶம்ப்போ வாஞ்ச்சதி நீலகந்த்தர ஸதா த்வாம் மே மநஶ்சாதக: ॥52॥

(ஶம்ப்போ !) சம்புவே ! (நீல கந்த்தர !) நீலித்த கழுத்துள்ளவரே ! என் மனமாகிய சாதகம் மேகமாகிய உம்மை எப்போதும் எதிர்பார்க்கிறது. மேகம் போல் கருணை எனும் அமுதநீரைப்பொழிபவர் (காருண்ய அமிருதவர்ஷிணம்) கடுந்துயரமான கோடை வெப்பத்தைக் குலைப்பதெனும் தொழிலில் முனைந்தவர். (கன - விபத் - க்ரீஷ்மச் ச்சிதா கர்மடம்) வித்தியை (கல்வியறிவு) எனும் பயிர்வளரக் காய்க்க நல்மனமுள்ளவர்களால் வழிபடத்தக்கவர் (வித்யா ஸஸ்யப் பலோதயாய ஸுமநஸ் ஸம்ஸேவ்யம்) மேகம் போல் விருப்பம் போல் வடிவேற்பவர். (இச்சாக்ருதிம்) பக்தர்களாகிய ஆடுகிறன்ற மயில்களுடன் கூடியவர். (ந்ருத்யத் பக்த மயூரம்) மலையில் வாழ்பவர் (அத்ரிநிலயம்) வேகமாக ஆடுகின்ற மின்னல் போன்ற செஞ்சடை கொண்டவர். (சஞ்சத்ஜடா மண்டலம்) சாதகம் போன்ற என்மனம் மேகம் போன்ற உம்மையே எதிர்பார்க்கிறது (மே மநஶ்சாதக: ஸதா த்வாம் வாஞ்ச்சதி)

மேகத்தின் தொடர்பாக மயிலுடன் சிவன் ஒத்துப் பார்க்கப்பெறுகிறார்.

आकाशेन शिखी समस्तफणिनां नेत्रा कलापी नता-
नुग्राहि प्रणवोपदेश निनदैः केकीति यो गीयते ।
श्यामां शैलसमुद्भवां घनरुचिं दृष्ट्वा नटन्तं मुदा
वेदान्तोपवने विहार रसिकं तं नीलकण्ठं भजे ॥ ५३ ॥

ஆகாஶேந ஶிகீ ஸமஸ்தபணிநாம் நேத்ரா கலாபீ நதா-
நுக்ராஹி ப்ரணவோபதேஶ நிநதை: கேகீதி யோ கீயதே ।
ஶ்யாமாம் ஶைலஸமுத்ப்பவாம் கநருசிம் த்ருஷ்ட்வா நடந்தம் முதா வேதாந்தோபவநே விஹார ரஸிகம் தம் நீலகண்டம் பஜே॥53॥

மயில்போன்ற நீலித்த கழுத்துடையவரை வழிபடுகிறேன். (தம் நீலகண்ட்டம் பஜே) வானை நோக்கிய கொண்டை உள்ளது மயில். வானையே கொண்டையாக கொண்டது இந்தமயில். (ஆகாஶேந ஶிகீ) ஆபரணமாக ஆன ஆயிரம் கண்கள் கொண்ட ஆதி சேஷன் இதன் தோகை. (ஸமஸ்தப்பணிநாம் நேத்ரா கலாபீ) தன்னைவணங்கியவருக்கு அருள் புரிய பிரணவ உபதேசம் செய்கிற ஒலியே இதன் கூவல்.

(நதாநுக்ராஹி ப்ரணவோபதேஶநிநதை: கேகீ,) இவ்வாறு இவர் புகழப்பெற்றவர். (இதி யோ கீயதே) கறுப்பான மேகநிறமுள்ள மலை மகளைக் கண்டதும் மேகத்தைக் கண்டதும் ஆடுவதுபோல் மகிழ்ச்சி மிகுதியால் ஆடுவது. (ஶ்யாமாம் கநருசிம் ஶைலஸமுத்ப்பவாம் த்ருஷ்ட்வா முதா நடந்தம்) வேதாந்தம் எனும் தோட்டத்தில் இனிது பொழுது போக்குவது (வேதாந்தோபவநே விஹாரரஸிகம்.) இந்த நீலகண்டமயிலை வழிபடுகிறேன்.

சிவநடனம் பிரதோஷவேளையில் மிகவும் புகழ்பெற்றது. கூத்தர் பிரான் நடராஜர் என்று தொழிலால் வந்த பெயர். இவர் ஆடும்போது கூட ஆட, பாட, தாளம்போட, மத்தனம் வாசிக்க எனப்பெரும் கூட்டமே உண்டு.

सन्ध्या घर्मदिना त्ययो हरिकराघात प्रभूतानक-
ध्वानो वारिद गर्जितं दिविषदां दृष्टिच्छटा चञ्चला।
भक्तानां परितोष बाष्प वितति वृष्टि र्मयूरी शिवा
यस्मिन्नुज्ज्वल ताण्डवं विजयते तं नीलकण्ठं भजे॥ ५४॥

ஸந்த்த்யா க்கர்மதிநாத்யயோ ஹரிகராக்காத ப்ரபூதாநக-
த்த்வாநோ வாரித கர்ஜிதம் திவிஷதாம் த்ருஷ்டிச்சடா சஞ்சலா ॥
பக்தாநாம் பரிதோஷ பாஷ்ப விததிர் வ்ருஷ்டிர் மயூரீ ஶிவா
யஸ்மிந்நுஜ்ஜ்வல தாண்டவம் விஜயதே தம் நீலகண்டம் பஜே॥54॥

இந்த மயிலாடப் பிரதோஷ வேளைதான் வெயில் காலத்தின் இறுதியில் வருகிற மழைகாலம். விஷ்ணுவின் கைகளின் அடியால் எழுப்பப்பெறுகிற மத்தள ஒலியே மேக இடி யொலி. (கர்மதிநாத்யய: ஸந்த்யா. வாரித கர்ஜிதம் ஹரிகர ஆகாத ப்ரபூத ஆநகத் த்வாந:) தேவர்களின் கண்பார்வையே மின்னல் கொடி. (திவிஷதாம் த்ருஷ்டிச்சடா சஞ்சலா.) பக்தர்களின் ஆனந்தக் கண்ணீர் பெருக்கே மழை. (பக்தாநாம் பரிதோஷபாஷ்பவிததி: வ்ருஷ்டி:) பார்வதியே பெண்மயில் (சிவா மயூரீ) இந்த சூழ்நிலையில் வேகமாக ஆடுகின்ற அந்த நீல கண்டர் என்ற மயிலை வழிபடுகிறேன். (யஸ்மிந் உஜ்ஜ்வல தாண்டவம் விஜயதே தம் நீல கண்ட்டம் பஜே.)

ஸரஸ்வதி வீணை வாசிக்க, இந்திரன் புல்லாங்குழலூத, பிரும்மாதாளம் போட லக்ஷ்மி பாட, விஷ்ணு மத்தளம் வாசிக்க,

தேவர் குழாம் காண பிரதோஷ வேளையில் சிவன் ஆடுகிறுர் என பிரதோஷ ஸ்தோத்திரம் கூறும். தேவி ஆமோதித்து ரஸிப்பாள்.

**वाग्देवी धृतवल्लकी, शतमखो वेणुं दधत्पद्मजः तालोन्निद्रकरो रमा भगवती गेयप्रयोगान्विता । विष्णुस्तुङ्गमृदङ्ग ताडन पटुर्देवाः समन्तात् स्थिताः सेवन्ते तमनु प्रदोषसमये देवं मृडानीपतिम् ।**

**आद्यायामित तेजसे श्रुतिपदैर्वेद्याय साध्याय ते**
**विद्यानन्दमयात्मने त्रिजगतः संरक्षणोद्योगिने ।**
**ध्येयायाखिल योगिभिः सुरगणैर्गेयाय मायाविने**
**सम्यक् ताण्डव संभ्रमाय जटिने सेयं नतिश्शंभवे ।। ५५ ।।**

ஆத்யாயாமித தேஜஸே ஶ்ருதிபதைர்வேத்யாய ஸாத்த்யாய தே
வித்யாநந்தமயாத்மநே த்ரிஜகத: ஸம்ரக்ஷணோத்யோகிநே ।
த்த்யேயாயாகில யோகிபி: ஸுரகணைர்கேயாய மாயாவிநே
ஸம்யக் தாண்டவ ஸம்ப்ரமாய ஜடிநே ஸேயம் நதிஶ்ஶம்பவே ॥ 55 ॥

நன்கு தாண்டவத்தில் பரபரப்புடன் ஈடுபட்ட சடையாளரான சம்புவுக்கு இதோவணக்கம். (ஸம்யக் தாண்டவஸம்ப்ப்ரமாய ஜடிநே ஶம்ப்பவே ஸேயம் நதி:) இவர் உலகின் முழுமுதற்கடவுள். எல்லோருக்கும் ஆதி. (ஆத்யாய) அளவு கடந்த ஒளியுள்ளவர் (அமித தேஜஸே) மற்ற ஒளி மண்டலங்களுக்கும் ஒளிதருகிற பேரொளி. வேதவாக்யங்களால் இவர் இன்ஞர் இத்தகையவர் என உணரத்தக்கவர். (ஶ்ருதி பதைர் வேத்யாய) நீண்ட இடைவிடாத தவத்தால் (உடல் மன ஆத்ம உழைப்பால்) பெறத்தக்கவர் (ஸாத்த்யாய) ஞானமும் ஆனந்தமுமானவர். (வித்யாநந்தமயாத்மநே) கல்வியால் பெற்ற அறிவு சுய அறிவாகிப் பரம் பொருளின் உணர்வாகும் போது வித்யையாகிறது. அதுவும் அதனுல் பெறப் பெறுகிற ஆனந்தமும் சிவபெருமானே. மூவுலகையும் காப்பதில் முழுவதும் ஈடுபட்டவர். (த்ரிஜக தஸ்ஸம்ரக்ஷணோத்யோகிநே) யோகிகள் அனைவராலும் தியானிக்கத் தக்கவர் (அகிலயோகிபிர்த்த்யேயாய) தேவர்கள் இணைந்து பாடத்தக்கவர். (ஸுரகணைர் கேயாய) பெரும் மாயாவி. (மாயாவிநே) இயற்கையை ஆட்டிப்படைத்து உலகமாக வேஷம் போடுபவரானதால் மாயாவி. இவருக்கு நமஸ்காரம்.

नित्याय त्रिगुणात्मने पुरजिते कात्यायनीश्रेयसे
सत्यायादिकुटुंबिने मुनिमनः प्रत्यक्ष चिन्मूर्तये।
मायासृष्ट जगत्त्रयाय सकलाम्नायान्त संचारिणे
सायं ताण्डव संभ्रमाय जटिने सेयं नतिश्शंभवे ॥ ५६ ॥

நித்யாய த்ரிகுணாத்மநே புரஜிதே காத்யாயநீ ஶ்ரேயஸே
ஸத்யாயாதிகுடும்பிநே முநிமந: ப்ரத்யக்ஷ சிந்மூர்தயே ।
மாயாஸ்ருஷ்ட ஜகத்த்ரயாய ஸகலாம்நாயாந்த ஸஞ்சாரிணே
ஸாயம் தாண்டவ ஸம்ப்ப்ரமாய ஜடிநே ஸேயம் நதிஶ்ஶம்ப்பவே ॥ 56 ॥

*பார்வையாளரை மகிழ்விக்க ஒரு ஆட்டம், (சு. 54) உலகைக் காக்க ஒரு ஆட்டம் (சு.55) என ஆடியவர் உலகைத் தோற்றுவிக்க இதோ ஆடுகிறார். அவர் நித்யர் - என்றும் உள்ளவர். நித்ய நிலேயில் மாற்றமின்றி இருந்தவர்.* **(நித்யாய)** *உலகமாக மாற ஸத்வம் ரஜஸ். தமஸ் என்ற முக்குணங்களாக ஆனார்.* **(த்ரிகுணாத்மநே)** *ஸ்தூலம் ஸூக்ஷ்மம் காரணம் என்ற மூன்று உடலமைப்பைத் தோற்றுவித்து அதனைத் தன் வசத்தில் கொண்டவர்* **(புரஜிதே),** *மாயையாகத் தனக்கு உதவ கதவம்சத்தில் தோன்றிய காத்யாயினியின் மேன்மையே உருவானவர்* **(காத்யாயினீ ஶ்ரேயஸே),** *ஸத்யமே வடிவானவர்* **(ஸத்யாய)** *முதலில் பார்வதியை மணந்து விநாயகரையும் குகரையும் புதல்வராகத் தோற்றுவித்து ஆதி குடும்பியானவர்.* **(ஆதிகுடும்பிநே)** *இவ்வளவு உருமாற்றத்தைக் கொண்ட நிலேயிலும் முனிவர் தம் உள்ளத்தில் சுத்த சித்தின் வடிவினராகத் தோன்றியவர்* **(முநிமந: ப்ரத்யக்ஷ சின் மூர்தயே)** *தன் மாயைதுணை கொண்டு மூவுலகையும் படைத்தவர்.* **(மாயாஸ்ருஷ்ட ஜகத்த்ரயாய)** *உலகின் முன்னிருந்து உலகைத் தோற்றுவித்து உலகை காத்து உலக உருமறைத்து உலகின் மறைவுக்குப் பின்னருமிருக்கின்ற பொருள் என உணர்த்துகின்ற வேதமுடிவான எல்லா உபநிஷத்துகளின் உட்கருத்தாக விளங்குபவர்* **(ஸகலாம்நாயாந்த ஸஞ்சாரிணே)** *மாலேப் பொழுதில் பரபரப்புடன் ஆடுபவர்* **(ஸாயம் தாண்டவ ஸம்ப்ப்ரமாய)** *சடையரான அந்த சம்புவிற்கு இந்த நமஸ்காரம்* **(ஜடிநே ஶம்ப்பவே ஸேயம் நதி:।)** *பரம்பொருள் முக்குணங்களானதும் பிரும்மா விஷ்ணு ருத்திரர் என்ற மும்மூர்த்தித் தோற்றம் பெற்றது. பரம் பொருள் நிலே பின்புலனுகி விட்டதால், ஞானிகளுக்கே தத்துவம் புரிந்தது.*

*மனத்திற்கு எத்தனை அறிவு புகட்டினாலும் காட்சிகளைத் காட்டி நிரூபித்தாலும், விளையாட்டாகப் புரியவைத்தாலும் பழையகுருட்டியல்பு மறையாததால் மறுபடி இறைவனைக் காக்க வேண்டுகிறார்.*

**नित्यं स्वोदर पोषणाय सकलानुद्दिश्य वित्ताशया**
**व्यर्थं पर्यटनं करोमि भवतस्सेवां न जाने विभो।**
**मज्जन्मान्तर पुण्यपाक बलतस्त्वं शर्व सर्वान्तरः**
**तिष्ठस्येव हि तेन वा पशुपते ते रक्षणीयोऽस्म्यहम्॥ ५७॥**

**நித்யம் ஸ்வோதர போஷணாய ஸகலாநுத்திஶ்ய வித்தாஶயா**
**வ்யர்த்தம் பர்யடநம் கரோமி பவதஸ்ஸேவாம் ந ஜாநே விபோ ।**
**மஜ்ஜந்மாந்தர புண்யபாக பலத ஸ்த்வம் ஶர்வ ஸர்வாந்தர:**
**திஷ்டஸ்யேவ ஹி தேந வா பஶுபதே தே ரக்ஷணீயோऽஸ்ம்யஹம்**

*உம்மை எல்லாவற்றிற்கும் நாடலாம். எனினும் நாள் தோறும் தன் வயிற்றை நிரப்பிக் கொள்ள, பொருள் நாடி, எல்லோரையும் நோக்கி (உம்மை நாடாமல்) வீணே சுற்றிச் சுற்றி வருகிறேன்.* **(நித்யம் ஸ்வோதரபோஷணாய வித்தாஶயா ஸகலான் உத்திஶ்ய வ்யர்த்தம் பர்யடனம் கரோமி.)** *எங்கும் நீக்கமற நிற்பவரே !* **(விபோ!)** *உம்மை வழிபடுவதெங்ஙனம் என்பது பற்றி மட்டும் எனக்குத் தெரியது.* **(பவத: ஸேவாம் நஜாநே !)**

*ஆனால் என்முன் பிறவிகளில் செய்த நல்வினைப் பயனாக உள்ளத்தில் அமர்பவராக அனைவருக்கும் நெருங்கியவராக உள்ளீர்.* **(மஜ்ஜன்மாந்தர புண்யபாக பலத: த்வம் ஸர்வாந்தர: அஸி)** *பக்தர்களின் பாபத்தைச் செதுக்குபவரே !* **(ஶர்வ)** *பசுபதியே* **(பஶுபதே)** *மிகவும் நெருங்கிய வரானதால் உம்மால் நான் காப்பாற்றத் தக்கவன்.* **(தேந வா தே ரக்ஷணீய: அஸ்மி)**

*அறியாமை மிகுதியால் உம்மை என் மனம் உருவகப்படுத்த இயலாது. என் அறியாமையை அகற்றி என் முன் தோன்றுவீர் !*

**एको वारिजबान्धवः क्षितिनभो व्याप्तं तमो मण्डलम्**
**भित्वा लोचन गोचरोऽपि भवति त्वं कोटिसूर्यप्रभः ।**

**वेद्यः किन्न भवस्यहो घनतरं कीदृग्भवेन्मत्तमः**
**तत्सर्वं व्यपनीय मे पशुपते साक्षात् प्रसन्नो भव ॥ ५८ ॥**

ஏகோ வாரிஜபாந்தவ: க்ஷிதிநபோ வ்யாப்தம் தமோ மண்டலம்
பித்வா லோசந கோசரோபி பவதி த்வம் கோடிஸூர்ய ப்ரப: ।
வேத்ய: கிந்ந பவஸ்யஹோ கநதரம் கீத்ருக்பவேந்மத்தம:
தத்ஸர்வம் வ்யபநீய மே பஶுபதே ஸாக்ஷாத் ப்ரஸந்நோ பவ ॥ 58 ॥

*பசுபதியே !* (பஶுபதே !) *தாமரைக்கு உறவினரான ஸூர்யன் ஒருவரே மண்ணும் விண்ணும் கடந்து நிற்கிற இருள் சூழலைப் பிளந்து அகற்றிக் கண்ணிற்குப் புலப்படுபவராகவும் உள்ளார்.* (வாரிஜபாந்த்தவ: ஏக: க்ஷிதி நபோவ்யாப்தம் தமோ மண்டலம் ப்பித்த்வா லோசன கோசரோ-பி பவதி) *நீரோ கோடி சூரியர்களின் ஒளி கொண்டவர்.* (த்வம் கோடி ஸூர்யப்ரப:) *நீர் ஏன் புலப்படவில்லை.* (வேத்ய: கிம் நபவஸி!) *ஐயகோ! என்னைச் சுற்றியுள்ள இருள் (அறியாமை) அவ்வளவு நெருக்கமிக்கதாக வா இருக்கும்?* (அஹோ மத்தம: கீத்ருக் கநதரம் பவேத்) *அதனைத்தையும் அகற்றி விட்டு நேரே என்முன் தோன்றுவீர் !* (தத் ஸர்வம் வ்யபநீய ஸாக்ஷாத்மே ப்ரஸன்னோ பவ !)

*ஒவ்வொன்றுக்கு ஒவ்வொன்றில் நாட்டமிருக்கும். அது இயல்பு. என்மனம் உம்மைத் தான் நாடுகிறது.*

**हंसः पद्मवनं समिच्छति यथा नीलांबुदं चातकः**
**कोकः कोकनद प्रियं प्रतिदिनं चन्द्रं चकोरस्तथा ।**
**चेतो वांछति मामकं पशुपते चिन्मार्ग मृग्यं विभो**
**गौरीनाथ भवत्पदाब्ज युगलं कैवल्य सौख्य प्रदम् ॥ ५९ ॥**

ஹம்ஸ: பத்மவநம் ஸமிச்சதி ததா நீலாம்புதம் சாதக:
கோக: கோகநத ப்ரியம் ப்ரதிதிநம் சந்த்ரம் சகோரஸ்ததா ।
சேதோ வாஞ்ச்சதி மாமகம் பஶுபதே சிந்மார்க ம்ருக்யம் விபோ
கௌரீநாத பவத்பதாப்ஜ யுகலம் கைவல்ய ஸௌக்ய ப்ரதம் ॥ 59 ॥

*பசுபதியே ! எங்கும் நிறைந்தவரே ! கௌரியின் மணாளரே!* (பஶுபதே ! விபோ! கௌரீநாத !) *அன்னபட்சி தாமரைக் குளத்தை நாடுகிறது.* (ஹம்ஸ: பத்மவநம் ஸமிச்சதி) *சாதகபட்சி கார்மேகத்தையும்* (நீலாம்புதம் சாதக:) *சக்ரவாகப்பறவை*

சூரியனையும் (கோக: கோகநதப்ரியம்) சகோரபட்சி தினமும் சந்திரனையும் நாடுகிறது. (சகோர: சந்த்ரம் ப்ரதிதினம் ஸமிச்சதி) அவ்வாறே என் சித்தமும் ஞானமார்க்கத்தால் அடையத்தக்க மோக்ஷ சுகம் தருகிற உமது இருதிருவடிகளையும் நாடுகிறது. (ததா மாமகம் சேத: சிந்மார்க ம்ருக்யம் கைவல்ய ஸௌக்க்யப்ரதம் பவத்பதா ப்ஜயுகளம் வாஞ்ச்சதி)

*மனமே ! அபயம் தருபவரை நாடுவாய்!*

**रोधस्तोयहृतः श्रमेण पथिकः छायां तरोर्वृष्टितः**
**भीतः स्वस्थगृहं गृहस्थ मतिथि दीनः प्रभुं धार्मिकम् ।**
**दीपं सन्तमसाकुलश्च शिखिनं शीतावृतस्त्वं तथा**
**चेतस्सर्व भयापहं व्रज सुखं शंभोः पदांभोरुहम् ॥ ६० ॥**

ரோதஸ்தோயஹ்ருத: ஶ்ரமேணபதிக: சாயாதரோர்வ்ருஷ்டித:
பீத: ஸ்வஸ்தக்ருஹம் க்ருஹஸ்த்த மதிதிர்தீந: ப்ரபும் தார்மிகம் ।
தீபம் ஸந்தமஸாகுலஶ்ச ஶிகிநம் ஶீதாவ்ருத ஸ்தவம் ததா
சேதஸ்ஸர்வ பயாபஹம் வ்ரஜ ஸுகம் ஶம்போ: பதாம்போருஹம் ॥60॥

*மனமே !* (சேத: !) *வெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட்டவன் கரையையும்* (தோயஹ்ருத: ரோத:) *வழிநடந்துகளைத்தவன் மரநிழலையும்* (பதிக: ஶ்ரமேணதரோ: ச்சாயாம்,) *மழைக்குப் பயந்தவன் தான் குடியிருக் குமிடத்தையும்* (வ்ருஷ்டித: பீத: ஸ்வஸ்த்த க்ருஹம்,) *நாடோடி இல்லறத்தானையும்* (அதிதி: க்ருஹஸ்த்தம்) *ஏழை அறவழி செல்கிற வள்ளலையும்* (தீந: ப்ரபும் தார்மிகம்) *இருட்டால் நொந்தவன் விளக்கையும்* (ஸந்தமஸாகுல: தீபம்) *குளிரால் துன்புறுபவன் நெருப்பையும்* (சீதாவ்ருத: ஶிகிநம்) *எப்படி நாடுவானோ அப்படி எல்லாபயத்தையும் போக்குகிற சம்புவின் திருவடிகளைச் சுகமாகச் சென்றடைவாயாக !* (ததா ஸர்வபயாபஹம் ஶம்போ: பதாம்போருஹம் ஸுகம் வ்ரஜ)

*சித்தம் அன்புடன் பற்றியதில் நிலைத்து நின்றால் அது பக்தியாகும்.*

**अंकोलं निजबीजसन्ततिरयस्कान्तोपलं सूचिका**
**साध्वी नैजविभुं लता क्षितिरुहं सिन्धुस्सरिद्वल्लभम् ।**

प्राप्नोतीह यथा तथा पशुपतेः पादारविन्द द्वयम्
चेतोवृत्ति रुपेत्य तिष्ठति सदा सा भक्तिरित्युच्यते ॥ ६१ ॥

அங்கோலம் நிஜபீஜஸந்ததி ரயஸ்காந்தோபலம் ஸூசிகா
ஸாத்த்வீ நைஜவிபும் லதா க்ஷிதிருஹம் ஸிந்த்துஸ்ஸரித்வல்லபம் ।
ப்ராப்நோதீஹ யதா ததா பஶுபதே: பாதாரவிந்த த்வயம்
சேதோவ்ருத்தி ருபேத்ய திஷ்டதி ஸதா ஸா பக்திரித்யுச்யதே ॥ 61 ॥

*எவ்வாறு ஏறழிஞ்சில் என்ற மரத்தை அதிலிருந்து கீழே விழுந்த விதைகள் வரிசையாகச் சென்றடையுமோ !* **(யதா, அங்கோலம் நிஜபீஜஸந்ததி: ப்ராப்நோதி)** *ஊசி காந்தக்கல்லைப் பற்றுமோ* **(ஸூசிகா அயஸ் காந்தோபலம்)** *கற்புள்ள மனைவி தன் கணவனைப்பற்றுவாளோ* **(ஸாத்த்வீ நைஜவிபும்)** *கொடி மரத்தை நாடுமோ* **(லதா க்ஷிதிருஹம்,)** *ஆறு கடலைச் சென்றடையுமோ,* **(ஸிந்த்து: ஸரித்வல்லபம் ப்ராப்நோதி)** *அப்படியே என் சித்தப்போக்கும் எப்போதும் பசுபதியின் இருதிருவடித் தாமரைகளைச் சென்றடைந்து நிலைபெறுகிறது. அது பக்தி எனப்படும்.* **(ததா சேதோவ்ருத்தி: பஶுபதே: பாதாரவிந்தத்வயம் உபேத்ய ஸதா திஷ்ட்டதி, ஸாபக்தி: இதி உச்யதே).**

*சிசு தன் தாயை அன்பால் இனம் கண்டு நாடுகிறது. மற்ற மர இனங்களில் காண இயலாத அன்புப் பிணைப்பு அழிஞ்சில் மரத்திலும் அதன் விதையிலும் காணப்பெறுகிறது. இரும்பு தன் இயல்பான உறுதியை இழந்து காந்தத்தால் ஈர்க்கப் பெறுகிறது. கணவனை மனைவி வாழ்நாளின் ஒரே பற்றுக் கோடாகக் கொள்கிருள். அவர் மனமே இவளது மனமாகிறது. கொடியின் மெல்லியல்பு வலிவுள்ள மரத்தை (கொழுகொழும்பாக மட்டுமல்லாமல்) உயிரோட்டமிக்கதாய் உணர்ந்து பற்றுகிறது. பள்ளத்தை நோக்கிச் செல்லும் நீரின் இயல்பாக மட்டுமின்றி, தான் சென்றடைய வேண்டிய ஒரே இடமென்ற பாவனையுடன் மகாநதி கடலைச் சென்றடைகிறது. சென்றடையுமிடத்தின் ஈர்ப்பும், அவ்விடம் பெருமை மிக்கதென்று பெருமையுணர்வும், தான், தனதென்ற சிந்தனையை அகற்றி ஆத்ம ஸமர்ப்பணம் என்ற உயர் நோக்கமும், இந்த அன்பால் ஏற்படுகிற பிணைப்பை மாசற்றதாக்கி விடுகிறது. இருவரிடையே உள்ள ஏற்றத் தாழ்வோ, இயல்பால் பொருந்தாமையோ, எதிர்ப்பும் தடையும் மிக்க சூழ்நிலையோ இந்தப் பிணைப்பைப் பிரிப்பதில்லை என்பதும் விந்தையே.*

இவையனைத்தும், நடுவில் நேர்கிற தடைகள் அனைத்தையும் பொருட்படுத்தாமலும் அவற்றைக் கடந்தும் விரும்பி அடைய வேண்டியதென உறுதி கொண்ட தொன்றையே நாடிச் சென்றடைகின்றன. ஆர்வம் அன்புடன் கலந்து உறுதியுடன் நல்லதொன்றுக்காகச் செயல்படும் போது பக்தி நிலை பெறுகிறது.

*பக்தி தாய்போல் பக்தனைக்காக்கிறது.*

**आनन्दाश्रुभिरातनोति पुलकं नैर्मल्यत श्छादनम्**
**वाचा शंखमुखे स्थितैश्च जठरापूर्तिं चरित्रामृतैः ।**
**रुद्राक्षैर्भसितेन देव वपुषो रक्षां भवद्भावना -**
**पर्यङ्के विनिवेश्य भक्तिजननी भक्तार्भकं रक्षति ॥ ६२ ॥**

ஆநந்தாஶ்ருபிராதநோதி புலகம் நைர்மல்யதஶ் ச்சாதநம்
வாசா ஶங்க்கமுகே ஸ்த்திதைஶ்ச ஜடரா பூர்திம் சரித்ராம்ருதை: ।
ருத்ராக்ஷைர் பஸிதேந தேவ வபுஷோ ரக்ஷாம் பவத்பாவநா-
பர்யங்கே விநிவேஶ்ய பக்திஜநநீ பக்தார்ப்பகம் ரக்ஷதி ॥ 62 ॥

பெருந்தேவரே ! (தேவ) ! பக்தி எனும் தாய் ஆனந்தக் கண்ணீரால் நீராட்டி மயிர்க்காலிலும் மகிழ்ச்சி உணர்வையும், களங்கமற்ற மனமாகிற ஆடையால் மறைப்பையும் வாக்கு எனும் சங்குமுகத்திலுள்ள உனது கதை எனும் அமுதத்தால் வயிறு நிறைவதையும் செய்கிருள் (பக்தி ஜநநீ ஆநந்தாஶ்ருபி: புலகம், நைர்மல்யத: ச்சாதனம், வாசா சங்க்க முகே ஸ்த்திதைஶ் சரிதாம்ருதை: ச ஜடராபூர்திம் ஆதநோதி) ருத்ராக்ஷங்களாலும் விபூதியாலும் உடலுக்கு ரக்ஷை செய்கிருள். (ருத்ராக்ஷைர் பஸிதேந வபுஷ: ரக்ஷாம் ஆதநோதி) உம்மைப் பற்றிய ஆழ்ந்த சிந்தனையாகிற கட்டிலில் அமர்த்திப் பக்தனெனும் சிசுவைக் காப்பாற்றுகிருள் (பவத்ப்பாவநா பர்யங்கே விநிவேஶ்ய பக்தார்ப்பகம் ரக்ஷதி)

**मार्गावर्तितपादुका पशुपतेरङ्गस्य कूर्चायते**
**गण्डूषांबुनिषेचनं पुररिपो र्दिव्याभिषेकायते ।**
**किञ्चिद्भक्षितामांसशेष कवलं नव्योपहारायते**
**भक्तिः किं न करोत्यहो वनचरो भक्तावतंसायते ॥ ६३ ॥**

மார்காவர்திதபாதுகா பஶுபதேரங்கஸ்ய கூர்சாயதே
கண்டூஷாம்புநிஷேசநம் புரரிபோர் திவ்யாபிஷேகாயதே ।
கிஞ்சித்பக்ஷிதமாம்ஸஶேஷ கவலம் நவ்யோபஹாராயதே
பக்தி: கிம் ந கரோத்யஹோ வநசரோ பக்தாவதம்ஸாயதே ॥ 63 ॥

*ஸ்ரீ காளஹஸ்தியில் வாழ்ந்த கண்ணப்பர் பக்திக்கு எடுத்துக் காட்டாக அமைகிறார். வழிநடந்து தேய்ந்த பழஞ் செருப்பு பசுபதியின் உடலைத்தேய்த்துவிடுகிற தர்ப்பைக் குச்சாகிறது.* **(மார்க்காவர்திதபாதுகா பஶுபதே: அங்கஸ்ய கூர்ச்சாயதே.)** *வாயில் நிரப்பி உமிழ்ந்த நீர் திரிபுரங்களின் எதிரிக்கு தெய்விகப் பொருள் கொண்டு செய்த நீராட்டலாகிறது.* **(கண்டூஷாம்பு நிஷேசனம் புரரிபோ: திவ்யாபிஷேகாயதே.)** *சிறிது கடித்துத் தின்றமீதி மாம்ஸ கவளம் (வாய் கொள்ளுமளவு) புதிய பணியாரப் படைப்பாகிறது.* **(கிஞ்சித் பக்ஷித மாம்ஸ ஶேஷ கவலம் நவ்யோபஹாராயதே.)** *விந்தை ! பக்தி எதைத் தான் செய்யவில்லை.* **(பக்தி: கிம் ந கரோதி? வநசர: பக்தாவதம்ஸாயதே அஹோ !)** *காட்டுமிராண்டி பக்தர்களில் மேலானவனாகிறான்.*

**वक्षस्ताडन मन्तकस्य कठिनापस्मार संमर्दनम्**
**भूभृत्पर्यटनं नमत्सुरशिरः कोटीरसंघर्षणम्।**
**कर्मेदं मृदुलस्य तावक पदद्वन्द्वस्य गौरीपते (किं वोचितं)**
**मच्चेतो मणिपादुका विहरणं शंभो सदांगीकुरु ॥ ६४ ॥**

வக்ஷஸ்தாடந மந்தகஸ்ய கடிநாபஸ்மார ஸம்மர்தநம்
பூப்ருத்பர்யடநம் நமத்ஸுரஶிர: கோடீரஸங்க்கர்ஷணம் ।
கர்மேதம் ம்ருதுலஸ்ய தாவக பதத்வந்த்வஸ்ய கௌரீபதே (கிம் வோசிதம்)
மச்சேதோ மணிபாதுகா விஹரணம் ஶம்போ ஸதாங்கீகுரு ॥ 64

*கௌரியின் மணாளரே !* **(கௌரீபதே !)** *சம்புவே !* **(ஶம்ப்போ!)** *யமனின் மார்பில் உதைத்தலும்* **(அந்தகஸ்ய வக்ஷஸ்தாடனம்)** *கடினமான அபஸ்மாரனின் (காக்கைவலிப்பு நோயின் உருவகம்) மீது மிதித்தலும்,* **(கடிநா பஸ்மார ஸம்மர்த் நம்)** *மலையில் சுற்றிச் சுற்றி வருவதும்* **(பூப்ப்ருத்பர்யடனம்)** *தன்னை வணங்குகிற தேவர்களின் தலையில் அணிந்த கிரீடங்களின் இடர்களும்* **(நமத் ஸுரஶிர: கோடீர ஸங்க்கர்ஷணம்)**

இவையனைத்தும் உமது மெதுவான இரு திருவடிகளுக்கேற்ற செயலா? (இதம் ம்ருதுலஸ்ய தாவக பதத்வந்த்வஸ்ய கா்ம?) என் மனமாகிற ரத்ன பாதுகையணிந்து செயல் புரிவதை எப்போதும் ஏற்றுக் கொள்வீர். (மச்சேதோ மணிபாதுகா விஹரணம் ஸதா அங்கீகுரு.) என் சித்தத்தின் கடினத் தன்மையை உம் திருவடிகளைப் பாதுகாக்கப்பயன் படுத்திக் கொள்வீர். யமன் அபஸ்மாரம் மலை கிரீடத்தின் கூரிய முனை இவற்றின் தாக்கத்தை இது தாங்கிக் கொள்ளும். மார்கண்டேயனைக் காக்க யமனை உதைத்தார். தாருகாவனத்து ருஷிகள் அனுப்பிய அபிசாரமனிதன் அபஸ்மாரம். அவனை வீழ்த்தி அவன் முதுகின்மேல் நின்றார். உதைக்கும் போதும் அழுத்தும் போதும் நடக்கும் போதும் மற்றவை இடரும் போதும் உன் பாதங்களின் அடித்தளத்தில் பஞ்சணையாகி அவற்றின் மென்மை குன்றாமல் பாதுகாப்பேன்.

அன்புள்ளத்தின் வெளிப்பாடே பக்தி. சிவபக்தியால் பெறமுடியாதது எதுவு மில்லை. யமபயம் நீங்கும். தெய்வபலம்பெருகும். முக்தி கிட்டும்.

वक्षस्ताडन शंकया विचलितो वैवस्वतो निर्जराः
कोटीरोज्ज्वल रत्नदीपकलिका नीराजनं कुर्वते ।
दृष्ट्वा मुक्तिवधूस्तनोति निभृताश्लेषं भवानीपते
यच्चेतस्तव पादपद्म भजनं तस्येह किं दुर्लभम् ॥ ६५ ॥

வக்ஷஸ்தாடந ஶங்கயா விசலிதோ வைவஸ்வதோ நிர்ஜரா:
கோடிரோஜ்ஜ்வல ரத்நதீபகலிகா நீராஜநம் குர்வதே ।
த்ருஷ்ட்வா முக்திவதூஸ்தநோதி நிப்ப்ருதாஶ்லேஷம் பவாநீபதே
யச்சேத ஸ்தவ பாதபத்ம பஜநம் தஸ்யேஹ கிம் துர்லபம் ॥65॥

பவானியின் மணாளரே ! (பவாநீ பதே !) எவனுடைய மனம் உம் திருவடித் தாமரைகளை வழிபடுகிறதோ, அவனால் இவ்வுலகில் பெறமுடியாத தொன்றில்லை. (யச்சேத: தவ பாத பத்ம பஜநம் தஸ்ய இஹ துர்லபம் கிம்?) மார்பில் உதைக்கு அஞ்சி யமன் இடம் பெயர்ந்து ஓடுகிறான். (வக்ஷஸ் தாடநஶங்கயா வைவஸ்வத: விசலித:) தேவர்களோ கிரீடத்தின் ஒளிமிக்க ரத்னங்களாகிற தீபத்திரி கொண்டு ஆரத்தி எடுப்பார்கள். (நிர்ஜரா: கோடீரோஜ்ஜ்வல ரத்நதீபகலிகா நீராஜநம் குர்வதே )

இவனைக் கண்டதும் முக்தி எனும் சிறுபெண் இறுகத்தழுவிக் கொள்கிறாள் (த்ருஷ்ட்வா முக்தி வதூ: நிப்ப்ருதாஸ்லேஷம் தநோதி).

*இறைவ ! உமக்கு உலகைப் படைப்பதும் விளையாட்டு. விளையாட உதவ மக்களைப் படைத்தீர். விளையாட்டுப் பொருளுக்கு விளையாடுபவனின் மனத்திருப்தியே நோக்கம். அதனால் என் செயலில் குறை காணாதீர்.*

**क्रीडार्थं सृजसि प्रपंचमखिलं क्रीडामृगास्ते जनाः**
**यत्कर्माचरितं मया च भवतः प्रीत्यै भवत्येव तत्।**
**शंभो स्वस्य कु तूहलस्य करणं मच्चेष्टितं निश्चितम्**
**तस्मान्मामक रक्षणं पशुपते कर्तव्यमेव त्वया।। ६६ ।।**

க்ரீடார்த்தம் ஸ்ருஜஸி ப்ரபஞ்ச மகிலம் க்ரீடம்ருகா ஸ்தே ஜநா
யத்கர்மாசரிதம் மயா ச பவத: ப்ரீத்யை பவத்யேவ தத் ।
ஶம்போ ஸ்வஸ்ய குதூஹலஸ்ய கரணம் மச்சேஷ்டிதம் நிஶ்சிதம்
தஸ்மாந்மாமக ரக்ஷணம் பஶுபதே கர்தவ்ய மேவ த்வயா ॥ 66 ॥

*பசுபதியே ! சம்ப்புவே !* (பஶுபதே ! ஶம்போ !) *உலகனைத்தையும் விளையாடுவதற்காகப் படைக்கிறீர்.* (அகிலம் ப்ரபஞ்சம் க்ரீடார்த்தம் ஸ்ருஜஸி) *மக்கள் உமது விளையாட்டிற்கான வளர்ப்புப்பிராணிகள்* (ஜநா: தே க்ரீடா ம்ருகா:) *நான் செய்ததனைத்தும் உமது திருப்திக்காகவே யாகிறது.* (கர்ம மயாயத் ஆசரிதம் தத் பவத: ப்ரீத்யை ஏவபவதி) *என்னை நீர் உம் விருப்பப்படி ஆட்டுவித்ததும் நிச்சயமாக உமது மனக்களிப்பிற்கு (குதூஹலமடைவதற்கு)க் காரணமாகிறது.* (மச்சேஷ்டிதம் ஸ்வஸ்ய குதூஹலஸ்ய கரணம் நிஶ்சிதம்) *அதனால் என்னைக் காப்பதை நீர் செய்து தான் தீரவேண்டும்.* (தஸ்மாத் மத்ரக்ஷணம் த்வய கர்தவ்யேமவ.)

**बहुविध परितोषबाष्पपूरस्फुटपुलकाङ्कित चारुभोग भूमिम्।**
**चिरपद फलकांक्षि सेव्यमानां परमसदाशिवभावनां प्रपद्ये।। ६७ ।।**

பஹுவித பரிதோஷபாஷ்பபூர
ஸ்ப்புடபுலகாங்கித சாருபோக பூமிம் ।
சிரபத பலகாங்க்ஷி ஸேவ்யமாநாம்
பரமஸதாஶிவபாவநாம் ப்ரபத்யே ॥ 67 ॥

*பல தரப்பட்ட மகிழ்ச்சிகளும் ஆனந்தக்கண்ணீரும் வெளிப்படையான மயிர் கூச்சும் இனிது உணர அழகிய இடம் தருவதும்* (பஹுவித - பரிதோஷ - பாஷ்பபூர - ஸ்ப்புட புலகாங்கித சாருபோகபூமிம்) *வெகுகாலம் நிலைத்த பலனை விரும்புவர்களால் கையாளப்படுவதுமான ஒப்புயர்வற்ற ஸதா சிவரின் ஆழ்நிலைத் தியானத்தை அடைக்கலம் புகுகின்றேன்.* (சிரபதப்பலகாங்க்ஷி ஸேவ்யமாநாம் பரமஸதாஸிவ - பாவநாம் ப்ரபத்யே) *பரமசிவனின் ஆழ்ந்த தியானம் சிவானந்தம் விளைகிறபூமி.*

अमितमुदमृतं मुहुर्दुहन्तीं विमल भवत्पद गोष्ठ मावसन्तीम्।
सदय पशुपते सुपुण्य पाकां मम परिपालय भक्तिधेनु मेकाम्॥ ६८॥

அமிதமுதம்ருதம் முஹுர்துஹந்தீம்
விபல பவத்பத கோஷ்ட்ட மாவஸந்தீம்।
ஸதய பஶுபதே ஸுபுண்ய பாகாம்
மம பரிபாலய பக்திதேநு மேகாம்॥ 68॥

*தயைமிக்க பசுபதியே !* (ஸதய பஶுபதே !) *அளவற்ற ஆனந்த மெனும் பாலை அடிக்கடி சுரந்து கொண்டிருப்பதும்* (அமித முத் அம்ருதம் முஹு: துஹந்தீம்) *அப்பழுக்கற்ற உமது திருவடிகளாகிற கொட்டிலிலேயே தங்கியிருப்பதும்,* (விமல - பவத்பத - கோஷ்ட்டம் ஆவஸந்தீம்) *சிறந்த பழுத்த புண்ணியத்தின் பலனாக ஏற்பட்டதும்* (ஸுபுண்ய பாகாம்) *ஒரேயொரு பக்தி எனும் என் பசுவைக் காப்பாற்றுவீராக.* (ஏகாம் மம பக்தி தேனும் பரிபாலய.) *உமது திருவருளால் தான் என்னிடம் பக்தி தங்கும்.*

जडता पशुता कलंकिता कुटिल चरत्वं च नास्ति मयि देव।
अस्ति यदि राजमौले भवदाभरणस्य नास्मि किं पात्रम्॥ ६९॥

ஜடதா பஶுதா கலங்கிதா குடில சரத்வம் ச நாஸ்தி மயி தேவ।
அஸ்தி யதி ராஜமௌலே பவதாபரணஸ்ய நாஸ்மி கிம் பாத்ரம்॥ 69

*தேவனே ! சந்திரனைச் சிரசில் சூடியவரே !* (தேவ!) ராஜமௌளே ! *ஜடத்தன்மையோ பசுவாயிருப்பதோ குறையுடனிருப்பதோ வக்கிரமாகச் செல்வதோ என்னிடமில்லை யானல்* (ஜடதா பஶுதா கலங்கிதா குடிலசரத்வம் ச மயி நாஸ்தி

யதி) உமது ஆபரணமாகத் தகுதியற்றவனுவேனா? பவதாபரணஸ்ய பாத்ரம் நாஸ்மி கிம்? நீர் ஆபரணமாகக் கொண்டவை புலித் தோல், (ஜடம்) மான் (பசு) சந்திரன் (களங்கமுள்ளவன்) பாம்பு (வக்கிரமாக வளைந்து வளைந்து செல்வது). இப்படித் தானிருக்கவேண்டுமா ? நான் இவ்வாறில்லை என்பதால் புறக்கணிக்க வேண்டுமா? அவை குறைபாடு உள்ளவை. குறைபாடுள்ளதை ஏற்பதாயின் என்னிடம் அதற்குக் குறைவில்லையே ?

பகவான் தன்னை ஏற்றுக் கொண்டுவிட்டார் என ஒருக் கணம் மனம் குதிபோடுகிறது.

अरहसि रहसि स्वतन्त्र बुद्ध्या वरिवसितुं सुलभः प्रसन्नमूर्तिः ।
अगणित फलदायकः प्रभुर्मे जगदधिको हृदि राजशेखरोऽस्ति ॥ ७० ॥

அரஹஸி ரஹஸி ஸ்வதந்த்ர புத்த்யா
வரிவஸிதும் ஸுலப: ப்ரஸந்நமூர்தி: ।
அகணித பலதாயக: ப்ரபுர்மே
ஜகததிகோ ஹ்ருதி ராஜஶேகரோऽஸ்தி ॥ 70 ॥

பலரறியவோ தனிமையிலோ, இயல்பாக வழிபட எளியவர் (அரஹஸி, ரஹஸி, ஸ்வதந்த்ரபுத்த்யா வரிவஸிதும் ஸுலப:) எப்போதுமே அருள் புரிகிற பரிவுள்ளவர். (ப்ரஸந்த மூர்த்தி:) கணக்கிடாமல் பலனைத் தருபவர். (அகணித பலதாயக:) என் ஆளுனர், (மே ப்ரபு:) உலகிற்குட்படாதவர், உலகை மிஞ்சியவர், (ஜகததிக:) இந்த பிறைசூடி என் உள்ளத்திலுள்ளார். (ராஜ சேகர: மேஹ்ருதி அஸ்தி)

आरूढ भक्तिगुण कुंचित भाव चाप-
युक्तैश्शिवस्मरण बाणगणै रमोघैः ।
निर्जित्य किल्बिष रिपून् विजयी सुधीन्द्रः
सानन्द मावहति सुस्थिर राजलक्ष्मीम् ॥ ७१ ॥

ஆரூடபக்திகுண குஞ்சித பாவ சாப
யுக்தைஶ்ஶிவஸ்மரண பாணகணை ரமோகை: ।
நிர்ஜித்ய கில்பிஷ ரிபூந் விஜயீ ஸுதீந்த்ர:
ஸாநந்த மாவஹதி ஸுஸ்த்திர ராஜலக்ஷ்மீம் ॥ 71 ॥

*நல்லறிவு மிக்கவன்* (ஸுதீந்த்ர:) *உச்ச நிலையடைந்த பக்தி எனும் நாண்கயிற்றால் வளைக்கப் பெற்ற - சிவ நிலையாகிற வில்லில் பூட்டிய - வீணாகாத - எப்போதும் சிவ நினைவு என்ற அம்புகளால் பாபங்களாகிற எதிரிகளை வென்று வெற்றி பெற்றவனாக* (ஆரூட - பக்தி - குண - குஞ்சித -பாவ - சாப - யுக்தை: அமோகை: சிவஸ்மரண பாணகணை: கில்பிஷரிபூன் நிர்ஜித்ய விஜயீ) *நிலைத்த என்றுமழியாத பேராளுமை எனும் லக்ஷ்மியை ஆனந்தத்துடன் அடைகிறான்* (ஸுஸ்த்திர ராஜ்லக்ஷ்மீம் ஸாநந்தம் ஆவஹதி) *பக்தியால் சிவபாவனை, அதனால் இடைவிடாத சிவஸ்மரணம், அதனால் பாபம் நீங்குதல், நீங்காத ஆனந்தச் செல்வம் என்று தொடரும்.*

*பகவானின் திருவடி புதையல்போல். அதனைப் பெற வழி உண்டு.*

**ध्यानाञ्जनेन समवेक्ष्य तमः प्रदेशं**
**भित्वा महाबलिभिरीश्वरनाम मन्त्रैः ।**
**दिव्याश्रितं भुजगभूषणमुद्वहन्ति**
**ये पादपद्म मिह ते शिव ते कृतार्थाः ॥ ७२ ॥**

**த்த்யாநாஞ்ஜநேந ஸமவேக்ஷ்ய தம: ப்ரதேஶம்**
**பித்வா மஹாபலிபி ரீஶ்வரநாம மந்த்ரை: ।**
**திவ்யாஶ்ரிதம் புஜகபூஷண முத்வஹந்தி**
**யே பாதபத்ம மிஹ தே ஶிவ தே க்ருதார்த்தா: ॥ 72 ॥**

*சிவனே !* (ஶிவ !) *புதையல் கண்களில் படாது. அது இருக்குமிடத்தைத் தியானம் எனும் மையிட்டுக் கண்டுபிடித்து ஈசனின் திருநாமங்களாகிய மந்த்ரங்களால் வெட்டி பெரு வலிவுள்ள மறைப்பை அகற்றி தேவர்கள் சூழ்ந்திருக்கின்றதும் பாம்புகளை அணிந்திருப்பது மான உம் திருவடிகளாகிற அந்தப் புதையலை வெளிக் கொணர்பவர்களே வாழ்வின் பயனைப் பெற்றவர்கள். பகவானின் திருவடி புதையலைப் போன்ற தொரு மறைபொருள். அவரது தியானமும் நாம ஜபமும் மறைபொருளை வெளிப்படுத்தும்.* (த்யான அஞ்ஜநேந ஸமவேக்ஷ்ய, ஈஶ்வரநாமதேயை: மஹாபலிபி: தம: ப்ரதேஶம் ப்பித்வா திவ்யாஶ்ரிதம் புஜகபூஷணம் தே பாதபத்மம் யே உத்வஹந்தி, தே க்ரு தார்த்தா:)

*திருவடிகளை வழிபடுவது முக்தியின் விளைநிலமாகும்.*

भूदारतामुदवहद्यदपेक्षया श्रीभूदार एव किमतस्सुमते लभस्व।
केदार माकलित मुक्ति महौषधीनां पादारविन्दभजनं परमेश्वरस्य ॥ ७३॥

பூதாரதா முதவஹத் யதபேக்ஷயா ஶ்ரீ
பூதார ஏவ கிமதஸ்ஸுமதே லபஸ்வ ।
கேதார மாகலித முக்தி மஹௌஷதீநாம்
பாதாரவிந்தபஜநம் பரமேஶ்வரஸ்ய ॥ 73 ॥

*நல்ல மனமே ! பரமேச்வரனின் திருவடித்தாமரைகளை வழிபடுவது எல்லோரும் மனத்தால் நாடுகின்ற முக்தி எனும் சிறந்த ஓஷதிப்பயிர்களின் விளை நிலம்.* (பரமேஶ்வரஸ்ய பாதாரவிந்த பஜநம் ஆகலித முக்தி மஹௌஷதீநாம் கேதாரம்) *அதனையடைய விரும்பி, ஸ்ரீ - பூ என்ற* (லக்ஷ்மி - பூமிதேவி) *என்ற இருவரை மனைவியாகக் கொண்ட (ஸ்ரீ - பூதாரரான)* விஷ்ணு *பூதார (பூமியைக் கிளறுகிற பன்றி) நிலையை ஏற்றார்.* யதபேக்ஷயா ஸ்ரீ பூதார ஏவபூதாரதாம் உதவஹத் *இதை விட வேறு பேறு எது ? அதனை நீயும் அடைவாய்.* (கிம் அத:? லபஸ்வ)

आशापाशक्लेशदु र्वासनादि भेदोद्युक्तैर्दिव्यगन्धैरमन्दैः।
आशाशाटीकस्य पादारविन्दं चेतः पेटीं वासितां मे तनोतु ॥ ७४ ॥

ஆஶாபாஶக்லேஶதுர்வாஸநாதி
பேதோத்யுக்தைர் திவ்ய கந்தைரமந்தை: ।
ஆஶாஶாடீ கஸ்ய பாதாரவிந்தம் சேத:
பேடீம் வாஸிதாம் மே தநோது ॥ 74 ॥

*ஆசை கயிறுபோன்று பிணைத்ததாலான துயரத்தையும் கெட்ட எண்ணங்களாகிய கெட்டமணத்தையும் நீக்குவதில் முனைந்த தீவிரமான நல்லெண்ணப்பழக்கங்களாகிய நறுமணங்களால்,* (ஆஶாபாஶக்லேஶதுர்வாஸநாதி பேதோத் யுக்தை: அமந்தை: திவ்ய கந்த்தை:) *திசை வெளிகளையே ஆடையாகப் புனைந்துள்ள ஈசனின் திருவடி* (ஆஶாஶாடீகஸ்ய பாதாரவிந்தம்) *எனது மனமாகிற பெட்டியை நறுமண முள்ளதாக நல்வாஸனை யுள்ளதாகச் செய்யட்டும்.* (சேத: பேடீம் வாஸிதாம் மே தநோது)

ஆசையும் ஆசைப்பட்டதில் பற்றும் துயரையே தருவதுடன் மனத்தில் ஆழ்ந்த கெட்ட எண்ணங்களை உண்டாக்கும். துர் நாற்றம் வீசுகிற கெட்ட எண்ணங்களைப் போக்கிப் பகவானின் திருவடி வழிபாடு நல்ல எண்ணங்களைப்பரப்பி நறுமணமூட்டும். சித்தமெனும் பெட்டியைத் திறந்ததும் சிவமணம் வெளிப்படும்.

பக்தனின் மனம் அழகிய குதிரை போன்றது. கிழ எருதை விட்டு விட்டு இதனை வாகன மாக்க சிவனை வேண்டுகிறார்.

कल्याणिनं सरस चित्र गतिं सवेगं
सर्वेङ्गितज्ञ मनघं ध्रुव लक्षणाढ्यम्।
चेतस्तुरङ्ग मधिरुह्य चर स्मरारे
नेतस्समस्तजगतां वृषभाधिरूढ॥ ७५॥

கல்யாணிநம் ஸரஸ சித்ர கதிம் ஸவேகம்
ஸர்வேங்கிதஜ்ஞ மநகம் த்ருவ லக்ஷணாட்ட்யம் ।
சேதஸ்துரங்க மதிருஹ்ய சர ஸ்மராரே
நேதஸ்ஸமஸ்தஜகதாம் வ்ருஷபாதிரூட ॥ 75 ॥

மன்மதனின் எதிரியே ! உலகனைத்திற்கும் நாயகரே ! காளையை வாகனமாகக் கொண்டவரே ! (ஸ்மராரே! ஸமஸ்தஜ கதாம் நேத: ! வ்ருஷபாதிரூட!) உலகைக் காக்க முற்பட்ட உமக்கு விருஷபத்தை விட குதிரை ஏற்றதல்லவா? என் மனமாகிய குதிரை உமது பணிக்கு ஏற்றது. மங்களமானது (கல்யாணிநம்) ரசிக்கும்படி விந்தையாக ஸரஸநடை கொண்டது, (ஸரஸசித்ரகதிம்) வேகமிக்கது (ஸவேகம்) குறிப்பனைத் துமறிந்து நடப்பது (ஸர்வ இங்கிதஜ்ஞம்) குறையற்றது, மாசு மருவற்றது, (அநகம்) சிறந்த குதிரைக்கான ரேகை சுழி முதலிய லக்ஷணங்களுடன் கூடியது (த்ருவலக்ஷணாட்ட்யம்) என் மனமாகிய குதிரையில் ஏறி உலா வருவீர் (சேதஸ்துரங்கமதிருஹ்ய சர)

भक्तिर्महेशपदपुष्करमावसन्ती कादंबिनीव कुरुते परितोषवर्षम्।
संपूरितो भवति यस्य मनस्तटाकः तज्जन्मसस्यमखिलं सफलं च नान्यत्॥७६॥

பக்திர் மஹேஶபதபுஷ்கரமாவஸந்தீ
காதம்பிநீவ குருதே பரிதோஷவர்ஷம் ।
ஸம்பூரிதோ பவதி யஸ்ய மநஸ்தடாக:
தஜ்ஜந்மஸஸ்யமகிலம் ஸபலம் ச நாந்யத் ॥ 76 ॥

*மஹேசுவரனின் திருவடியாகிற வானத்தில் நிறைந்து பக்தியாகிற மேகவரிசை ஆனந்தமெனும் மழையைப் பொழிகிறது.* **(மஹேஶ பதபுஷ்கரம் ஆவஸந்தீ பக்தி: காதம்பிநீவ பரிதோஷவர்ஷம் கரோதி)** *எவனதுமனமாகிற குளம் அதனால் நிரப்பப்படுகிறதோ, அவனது பிறவியாகிற பயிர் முழுவதும் பயனுள்ளதாகும். மற்றது அவ்வாறு ஆவதில்லை.* **(யஸ்ய மநஸ்தடாக: (தேந) ஸம்பூரிதோ பவதி, தஜ்ஜன்ம ஸஸ்யம் அகிலம் ஸபலம், ந அன்யத்.)** *பக்திமழையில் நனையாத சித்தமும் வாழ்வும் பயனற்றது.*

बुद्धिःस्थिरा भवितु मीश्वर पादपद्म
सक्ता वधूर्विरहिणीव सदा स्मरन्ती ।
सद्भावना स्मरण दर्शन कीर्तनादि
संमोहितेव शिवमन्त्र जपेन विन्ते ॥७७

புத்தி:ஸ்திரா பவிது மீஶ்வர பாதபத்ம
ஸக்தா வதூர்விரஹிணீவ ஸதா ஸ்மரந்தீ ।
ஸத்ப்பாவநா ஸ்மரண தர்ஶந கீர்தநாதி
ஸம்மோஹிதேவ ஶிவமந்த்ர ஜபேந விந்தே ॥ 77 ॥

*ஈசனின் திருவடித்தாமரைகளைப் பற்றிக் கொண்ட என் அறிவு, சலனமற்று ஸ்திரமாக இருக்க, கணவனை விட்டுப்பிரிந்த புதுமணப் பெண்போல் எப்போதும் அதையே நினைத்துக் கொண்டிருப்பதாகவும்* **(ஈஶ்வர பாதபத்ம ஸக்தா புத்த்தி: ஸ்த்திரா பவிதும் விரஹிணீ வதூரிவ ஸதா ஸ்மரந்தீ)** *பக்தியால் ஸ்திரநிலை பெற்றுவிட்ட ஆழ்ந்த சிந்தனை, எப்போதும் அதன் நினைவு, அதனையே காண்பது அதைப்பாடுவது இவற்றால் வேற்று நினைவற்றதாகி விட்டது போன்று* **(ஸத்ப்பாவநா ஸ்மரணதர்ஶந கீர்தநாதி ஸம்மோஹிதேவ)** *சிவ மந்திர ஜபத்துடன் அதே சிந்தையில் இருக்கிறது.* **(ஶிவ மந்த்ர ஜபேந விந்த்தே)**

*புதுமணப் பெண்போன்று உம்மையே சிந்திக்கிற என் புத்தியின் துயர் நீக்குவீர்.*

सदुपचार विधिष्वनुबोधितां सविनयां सुहृदं सदुपाश्रिताम्।
मम समुद्धर बुद्धि मिमां प्रभो वरगुणेन नवोढ वधूमिव ॥ ७८ ॥

ஸதுபசார விதிஷ்வநுபோதிதாம்
ஸவிநயாம் ஸுஹ்ருதம் ஸதுபாஶ்ரிதாம் ।
மம ஸமுத்த்தர புத்த்தி மிமாம் ப்ரபோ
வரகுணேந நவோட வதூமிவ ॥ 78 ॥

வல்லவரே ! (ப்ரபோ !) என் அறிவு (எனும் புதுமணப் பெண்) பெரியோர்களுக்குப் பணிவிடை புரிவதில் தொடர்ந்து பயிற்சி பெற்றது. அடக்கமுள்ளது, நல்மனமுள்ளது, நன்மையில் நாட்டமுள்ளது. நல்ல குணமுள்ள கணவன் தன் நடை முறையால் புதுமணப் பெண்ணை வாழ்க்கையில் கைதூக்கிவிடுவது போல் என் அறிவையும் தூக்கிவிடுவீர். எத்தனை பயிற்சி பெற்றிருந்தாலும் புதிய சூழ் நிலையில் நிலைக்கேற்றவாறு நடக்க இயலாதபோது ஆதரித்துப் பரிவுடன் அணைத்துத் தேற்றுவது அவசியம். என் அறிவிற்கும் இந்தச் சூழ் நிலை புதிதே. நீர் தான் கை கொடுக்கவேண்டும். (ஸதுபசார விதிஷு அனுபோதிதாம் ஸ விநயாம் ஸுஹ்ருதம் ஸதுபாஶ்ரிதாம் மம இமாம் புத்த்திம் வர குணேந நவோடவதூம் இவ ஸமுத்த்தர.)

नित्यं योगिमन स्सरोज दल संचार क्षम स्त्वत् क्रमः
शंभो तेन कथं कठोर यमराड् वक्षः कवाटक्षतिः।
अत्यन्तं मृदुलं त्वदंघ्रियुगलं हा मे मनश्चिन्तय-
त्येतल्लोचन गोचरं कुरु विभो हस्तेन संवाहये ॥ ७९ ॥

நித்யம் யோகிமநஸ்ஸரோஜ தல ஸஞ்சார க்ஷமஸ்த்வத் க்ரம:
ஶம்போ தேந கதம் கடோர யமராட்வக்ஷ: கவாடக்ஷதி: ।
அத்யந்தம் ம்ருதுலம் த்வதங்க்ரியுகலம் ஹா மே மநஶ்சிந்தய-
த்யேதல்லோசந கோசரம் குரு விபோ ஹஸ்தேந ஸம்வாஹயே ॥79

சம்புவே ! எங்கும் நிறைந்தவரே ! (விபோ ! ஶம்ப்போ) உமது மிகவும் மென்மையுள்ள இரு திருவடிகளை இந்தக் கண்களுக்குப் புலப்படுமாறு செய்வீர். நான் என்கையால் அயர்வும் களைப்பும் நீங்கப்பிடித்துவிடுகிறேன். இவ்வாறு என் மனம் எண்ணுகிறது. (அத்யந்தம் ம்ருதுலம் த்வதங்க்க்ரியுகலம் ஏதத்லோசந கோசரம் குரு. ஹஸ்தேந ஸம்வாஹயே. ஹா மே மந:

சிந்தயதி) உமது நடை எப்போதும் யோகிகளின் மனமாகிற தாமரை இதழ் மீது நடைபழக ஏற்றது. (த்வத் க்ரம: நித்யம் யோகிமநஸ் ஸரோஜ தள ஸஞ்சாரக்ஷம:) அதனைக் கொண்டு கொடூரமான யமதர்ம ராஜனின் மரக்கதவுபோன்ற மார்பில் உதைப்பது எப்படி? (தேந கடோரயமராட் வக்ஷ: கவாட க்ஷதி:கதம் ? உமது திருவடிகளைக் காணவும் அவற்றின் அயர்வு நீங்கப் பிடித்து விட்டுப் பணிவிடை செய்யவும் என் மனம் ஏங்குகிறது.

**एष्यत्येष जनिं मनोऽस्य कठिनं तस्मिन्नटानीति मद्-**
**रक्षायै गिरिसीम्नि कोमलपद न्यासः पुराभ्यासितः ।**
**नोचेद्दिव्य गृहान्तरेषु सुमनस्तल्पेषु वेद्यादिषु**
**प्रायस्सत्सु शिलातलेषु नटनं शंभो किमर्थं तव ॥ ८० ॥**

ஏஷ்யத்யேஷ ஜநிம் மநோஸ்ய கடிநம் தஸ்மிந்நடாநீதி மத்
ரக்ஷாயை கிரிஸீம்நி கோமலபத ந்யாஸ: புராப்ப்யாஸித: ।
நோசே த்திவ்ய க்ருஹாந்தரேஷு ஸுமந ஸ்தல்பஷு வேத்யாதிஷு
ப்ராயஸ்ஸத்ஸு ஶிலாதலேஷு நடநம் ஶம்போ கிமர்த்தம் தவ ॥ 80 ॥

பகவான் இமயமலைத் தடங்களில் நடனம் புரிகிறார். கற்கள் குத்துவதால் கால் நோகுமே ! என் மனத்தின் மீது நடனம் புரியட்டுமே என்ற எண்ணம் குறுக்கிடுகிறது. என் மனமும் கடினமானதே ! முள்ளும் கூருள்ள கற்களும் உள்ள தரை குத்துமானால் கெட்ட எண்ணங்களும் பாபமும் நிறைந்த என் மனம் அதைவிட அதிகமாகத் துன்புறுத்தும். ஒருக்கால் என் மனத்தின் மீது நடனம் புரிவது அவசியமானால் என்ன செய்வது என்ற முன்யோசனையுடன் பகவான் மலையின் பாறையின் மீது நடனம் பழகுகிறாரோ என்ற சிந்தனை மனத்தைக்கனிய வைக்கிறது.

சம்ப்புவே ! (ஶம்போ!) இவன் பிறவி எடுப்பான். இவன் மனம் கடினமானது. அதில் நடக்கநேரும் என்று என்னைக் காப்பாற்ற வென்றே மலையடிவாரத்தில் உமது மென்மை மிக்க காலடிப்பதிப்பு முன்னர் பயிலபபட்டதோ? (ஏஷ: ஜநிம் ஏஷ்யதி. அஸ்ய மந: கடினம். தஸ் மின் அடானி இதி மத்ரக்ஷாயை கிரிஸீம்நி கோமள பதந்யாஸ: புரா அப்ப்யாஸித:) இல்லா விடில்

தேவதைகளின் மாளிகைகளின் நடுப்பகுதிகளும் பூ விரிப்புகளும் மேடை முதலியவையும் எங்கும் இருக்கும்போது பாறை மீது நடனம் உமக்கு எதற்கு? (நோசேத் திவ்ய க்ருஹாந்தரேஷு ஸுமநஸ்தல்பேஷு வேத்யாதிஷு ப்ராய: ஸத்ஸு, ஶிலாதலேஷு நடனம் தவ கிமர்த்தம்?)

இப்பிறவியிலேயே முக்திபெறலாம் என்கிறார்களே! அது? எங்ஙனம். ?இறந்த பின் முக்தியா? வாழும்போதே முக்தி பெற இயலுமா? என்ற ஐயங்கள் எழுகின்றன. பகவானிடமே கேட்கிறார்.

**कंचित्काल मुमामहेश भवतः पादारविन्दार्चनैः**
**कंचिद्ध्यान समाधिभिश्च नतिभिः कंचित् कथाकर्णनैः ।**
**कंचित् कंचिदवेक्षणैश्च नुतिभिः कंचिद्दशा मीदृशीं**
**यः प्राप्नोति मुदा त्वदर्पित मना जीवन् स मुक्तः खलु ॥ ८१ ॥**

கஞ்சித்கால முமாமஹேஶ பவத: பாதாரவிந்தார்சநை:
கஞ்சித்த்யாந ஸமாதிபிஶ்ச நதிபி: கஞ்சித் கதாகர்ணநை: ।
கஞ்சித் கஞ்சிதவேக்ஷணைஶ்ச நுதிபி : கம்சித்தஶா மீத்ருஶீம்
ய: ப்ராப்நோதி முதா த்வதர்பித மநா ஜீவந் ஸ முக்த: கலு ॥ 81 ॥

உமா தேவியுடன் கூடிக்காட்சி தருகிற மஹேசரே ! (உமாமஹேஶ !) சில நாட்கள் உமது திருவடித் தாமரைகளை மலரிட்டு வழிபடுவதாலும் (கஞ்சித் காலம் பவத: பாதாரவிந்தார்சனை:) சிலநாட்கள் உம்மையே உள்ளத்தில் உருவகப்படுத்தித் தியானித்தும் தியானத்தில் கரைந்து தன்னை இழந்து ஸமாதி நிலை யடைந்தும் (கஞ்சித்த்யானஸமா திபிஶ்ச,) சில நாட்கள் நமஸ்காரங்களாலும் கதைகேட் பதாலும் (கஞ்சித் காலம் நதிபி: கஞ்சிர் கதாகர்ணனை:) சில நாட்கள் உம் திருவுருவத்தைப் பார்த்துக் கொண்டேயிருப்பதாலும் (கஞ்சித் அவேக்ஷணைஶ்ச) சிலநாட்கள் துதிப்பதாலும் (கஞ்சித் நுதிபி:) ஆனந்தம் மிகுந்து மனத்தை உம்மிடம் பதித்தவனாக எவனாவது இம்மாதிரியான நிலையை அடைந்திருந்தால் அவன் இப்பிறவியில் இவ்வுடலில் வாழும் பேதே விடுதலை எய்தியவன் ஆவான் அல்லவா? (முதாத்வதர்பித மநா: ஈத்ருஶீம் தஶாம் ய: ப்ராப்நோதி, ஸ ஜீவன் முக்த: கலு?)

ஒரே நிலையில் தொடர்ந்து மனம் பதியாதாகையால் நிலைகளை மாற்றிக் கொண்டே இருப்பான். குறிப்பிட்ட நேரத்தினுள் மனம் பதிந்து விடும் என்று எதிர்பார்க்கவும் முடியாது. மனம் பதியும் வரை ஒரு முறையின் தொடர்ந்து பயிற்சி. மனம் பதியாமல் சலித்தால் வேறு முறைகையாள்வது என்று ஸாதகன் முயன்று கொண்டே இருந்தால் ஜீவனின் கட்டுகள் தாமே விலகும். முக்தி அப்போது உணரப்பெறும்.

**बाणत्वं वृषभत्व मर्धवपुषा भार्यात्वमार्यापते**
**घोणित्वं सखिता मृदंगवहता चेत्यादिरूपं दधौ।**
**त्वत्पादे नयनार्पणं च कृतवान् त्वद्देहभागो हरिः**
**पूज्यात्पूज्यतरस्स एव हि न चेत् को वा तदन्योऽधिकः ॥ ८२ ॥**

**பாணத்வம் வ்ருஷபத்வ மர்த்தவபுஷா பார்யாத்வ மார்யாபதே**
**கோணித்வம் ஸகிதா ம்ருதங்கவஹதா சேத்யாதிரூபம் ததௌ ।**
**த்வத்பாதே நயநார்பணம் ச க்ருதவாந் த்வத்தேஹபாகோ ஹரி:**
**பூஜ்யாத்பூஜ்யதரஸ்ஸ ஏவ ஹி ந சேத் கோ வா ததந்யோதிக: ॥ 82 ॥**

இறைவனுடன் ஒன்றிப்போவதே மேலான குறிக்கோள். அவரது எண்ணமே எனது எண்ணமாக, அவரது செயலே என் செயலாக ஆனாலன்றி ஒன்றிப் போவது எளிதல்ல. மஹா விஷ்ணுவே சிவபெருமானின் பல லீலைகளில் பங்குகொள் வதற்காக தன் இறை நிலையை மறந்து பல வகைகளில் துணை செல்கிறார்.

அம்பிகையின் மணாளரே! (**ஆர்யாபதே !**) திரிபுரனை எதிர்க்கும் போது உமது வில்லில் இணைகிற அம்பின் நிலையையும் (**பாணத்வம்**) சிதானந்த வடிவில் புலப் படாதிருந்தவரை உலகிற்கு உணர்த்த உம்மைச் சுமந்து செல்கிற விருஷபநிலையையும் (**வ்ருஷபத்வம்**) பார்வதியாகி இடப்பாதியை ஏற்ற மனைவி நிலையையும் (**அர்த்த வபுஷா பார்யாத்வம்**) உம்முடைய திருவடி காணப் பன்றி நிலையையும் (**கோணித்வம்**) பாற்கடலைக் கடைந்து அமுதத்தைப் பங்கிடும் போது மோகினியாகித் தோழி நிலையையும் (**ஸகிதா**) பிரதோஷ காலத்திய நடனத்தில் மத்தளத்தைச் சுமந்த நிலையும் (**ம்ருதங்க வஹதா**) என்றவாறு உம்மோடு இணைய ஹரி பலவடிவங்களை ஏற்றார். (**இத்யாதி ரூபம் ததௌ**). உமது திருவடியில் தன்

*கண்களையும் அர்பணம் செய்தார். (த்வத்பாதே நயனார்பணம் ச க்ருதவான்) ஹரி உமது உடலில் இடப்பாகத்தில் அமர்ந்தார். (த்வத்தேஹபாகோஹரி:) மிகவும் சிறப்புடன் வழிபடத்தக்கவர் அவரே. அப்படி இல்லாவிடில் அவரை விடச் சிறந்தவர் எவர்? (பூஜ்யாத் பூஜ்யரஸ்ய ஏவஹி? நசேத் கோவா ததந்ய: அதிக:?) உம்முடன் இணைவதே அதற்குக் காரணமாயின் உம்பெருமைக்கு எல்லை ஏது?*

**जनन मृति युतानां सेवया देवतानां**
**न भवति सुखलेशस्संशयो नास्ति तत्र।**
**अजनिममृतरूपं सांबमीशं भजन्ते**
**य इह परमसौख्यं ते हि धन्या लभन्ते॥ ८३॥**

ஜநந ம்ருதி யுதாநாம் ஸேவயா தேவதாநாம்
ந பவதி ஸுகலேஶஸ் ஸம்ஶயோ நாஸ்தி தத்ர ।
அஜநி மம்ருதரூபம் ஸாம்பமீஶம் பஜந்தே
ய இஹ பரமஸௌக்யம் தே ஹி தந்யா லபந்தே ॥ 83 ॥

*பிறப்பிற்கும் இறப்பிற்கும் உட்படுகிற தேவதைகளின் பூஜையால் சுகம் சிறிதளவும் உண்டாகாது. இதில் ஐயமில்லை* (ஜநந ம்ருதியுதாநாம் தேவதாநாம் ஸேவயா ஸுக லேஶ: நபவதி. தத்ர ஸம்ஶய: நாஸ்தி) *பிறப்பற்றவனும் அழிவற்றவனுமான ஈசனை ஸாம்பனை எவர் வழிபடுகிறார்களோ, அவர்களே இப்பிறவியில் பரமானந்தம் பெறுகின்றனர். அவர்களே பாக்ய சாலிகள்.* (அஜநிம் அம் ருதரூபம் ஈஶம் ஸாம்பம் யே பஜந்தே இஹ பரமஸௌக் க்யம் லபந்தே. தே ஹி தந்யா:)

**शिव तव परिचर्या सन्निधानाय गौर्याः**
**भव मम गुणधुर्यां बुद्धिकन्यां प्रदास्ये।**
**सकल भुवन बन्धो सच्चिदानन्द सिन्धो**
**सदय हृदय गेहे सर्वदा संवस त्वम्॥ ८४॥**

ஶிவ தவ பரிசர்யா ஸந்நிதாநாய கௌர்யா:
பவ மம குணதுர்யாம் புத்த்திகந்யாம் ப்ரதாஸ்யே ।
ஸகல புவந பந்த்தோ ஸச்சிதாநந்த ஸிந்த்தோ
ஸதய ஹ்ருதய கேஹே ஸர்வதா ஸம்வஸ த்வம் ॥ 84 ॥

*சிவபெருமானே! உலகைத் தோற்றுவிப்பவரே!* (ஶிவ ! பவ!) *எல்லா உலகிற்கும் உற்ற உறவினரே !பேரிருக்கையும் பேரறிவும் பேரானந்தமும் கடல்போல் நிறைந்திருப்பவரே!* (ஸகலபுவந பந்த்தோ ஸச்சிதானந்த ஸிந்த்தோ !) *உமக்குப் பணிவிடை செய்யப் பார்வதிக்கு உதவியாகக்குணச் சிறப்புமிக்க என் புத்தி எனும் பெண்ணைத் தருவேன்* (தவ கௌர்யா:பரிசர்யா ஸந்நிதாநாய குணதுர்யாம் மம புத்த்திகந்யாம் ப்ரதாஸ்யே) *தயையுள்ளவரே! என இதய வீட்டில் எப்போதும் வசிப்பீர்.* (ஸதய ! ஹ்ருதயகேஹே ஸர்வதா த்வம் ஸம்வஸ)

जलधिमथनदक्षो नैव पातालभेदी
न च वनमृगयायां नैव लुब्धः प्रवीणः।
अशन कुसुम भूषा वस्त्रमुख्यां सपर्यां
कथय कथमहं ते कल्पयानीन्दुमौले ॥ ८५ ॥

ஜலதிமதநதக்ஷோ நைவ பாதாலபேதீ
ந ச வநம்ருகயாயாம் நைவ லுப்த: ப்ரவீண: ।
அஶந குஸும பூஷா வஸ்த்ரமுக்க்யாம் ஸபர்யாம்
கதய கதமஹம் தே கல்பயாநீந்துமௌலே ॥ 85 ॥

*பிறை சூடியவரே!* (இந்து மௌலே !) *நீரே சொல்லும் ? உணவோ பூவோ ஆபரணமோ ஆடையோ முக்கியமான வழிபாட்டை எவ்வாறு உமக்குச் செய்வேன்.* (அஶந - குஸும - பூஷா வஸ்த்ர - முக்க்யாம் ஸபர்யாம் தே கதமஹம் கல்பயாணி. கதய) *பாற்கடலைக் கடைவதில் நான் தேர்ந்தவனல்ல. (உமது உணவாகிய விஷமும் பூவாகிய சந்திரனும் அங்குதான் கிடைக்கும்.* (ஜலதி மதநதக்ஷோ நைவ) *பாதாளத்தைக் குடைந்து (நாகலோகம்) செல்பவனுமல்ல (பாம்பாகிய ஆபரணம் தர)* (பாதாள பேதீ ந) *காட்டு மிருகவேட்டையில் நிபுணனுமல்ல. (யானைத்தோலையோ புலித் தோலையோ ஆடையாகத் தருவதற்கு)* (நச வநம்ருகயாயாம் ப்ரவீணோ லுப்த:) *இந்த நான்கும் என் இயலாமையால் உமக்குத் தரமுடியவில்லை.*

पूजाद्रव्य समृद्धयो विरचिताः पूजां कथं कुर्महे
पक्षित्वं न च वा किटित्वमपि न प्राप्तं मया दुर्लभम्।

जाने मस्तकमंघ्रिपल्लवमुमाजाने न तेऽहं विभो
न ज्ञातं हि पितामहेन हरिणा तत्त्वेन तद्रूपिणा ॥ ८६ ॥

பூஜாத்ரவ்ய ஸம்ருத்தயோ விரசிதா: பூஜாம் கதம் குர்மஹே
பக்ஷித்வம் ந ச வா கிடித்வ மபி ந ப்ராப்தம் மயா துர்லபம் ।
ஜாநே மஸ்தக மங்க்ரிபல்லவ முமாஜாநே ந தேஹம் விபோ
ந ஜ்ஞாதம்ஹி பிதாமஹேந ஹரிணா தத்வேந தத்ரூபிணா ॥ 86 ॥

*பூஜையில் முக்கியமான நிவேதனமும் பூவும், ஆபரணமும் ஆடையும் தர இயலாது என்பது ஒருபுறம். அவைகிட்டினுலும் உமது அடியும் முடியும் காண இயலாததால், அவற்றால் பயனில்லை.*

*உமையின் மணாளனே!* (உமாஜாநே) *எங்கும் நிறைந்தவரே!* (விபோ !) *பூஜைக்கான பூமுதலிய உபகரணங்களின் நிறைவு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.* (பூஜாத்ரவ்யஸம்ருத்தயோ விரசிதா:) *பூஜையை எவ்வாறு செய்வோம்!* (பூஜாம் கதம் குர்மஹே) *கிடைப்பதற்கரிய பறவை நிலேயோ பன்றிநிலேயோ கிட்ட வில்லேயே!* (துர்லபம் பக்ஷித்வம் வா நப்ராப்தம் கிடித்வமபி மயா ந ப்ராப்தம்) *உமது தலேயையோ, துளிர்போன்ற மெதுவான கால்களேயோ நான் தெரிந்து கொள்ளவில்லே.* (தே மஸ்தகம் அங்க்ரிபல்லவம் ந ஜாநே) *எல்லோருக்கும் பிதாமஹரான பிரும்மாவாலும் விஷ்ணுவாலும் பறவையாகவும் பன்றியாகவும் வடிவெடுத்தும் உண்மை நிலை தெரிந்து கொள்ள முடியவில்லே.* (பிதாமஹேன ஹரிணா தத்ரூபிணா வா தத்வேந ந ஜ்ஞாதம்) *பிரும்மாவும் ஹரியும் காணமுடியாத உமக்குப் பூஜை எப்படிச் செய்வது?*

अशनं गरलं फणी कलापो वसनं चर्म च वाहनं महोक्षः ।
मम दास्यसि किं किमस्ति शंभो तव पादांबुज भक्तिमेव देहि ॥ ८७ ॥

அஶநம் கரலம் பணீ கலாபோ வஸநம் சர்ம ச வாஹநம் மஹோக்ஷ:।
மம தாஸ்யஸி கிம் கிமஸ்தி ஶம்போ தவ பதாம்புஜ பக்திமேவதேஹி ॥

*ஈச! உம்மிடம் நான் கேட்கும் பொருள் என்ன இருக்கிறது ? சம்புவே !* (ஶம்போ) *உமது உணவு விஷம்.* (அஶநம் கரளம்) *ஆபரணம் பாம்பு* (கலாப: பணீ) *ஆடை தோல்* (வஸநம் சர்ம) *வாகனமோ பெரிய காளை.* (வாஹநம் மஹோக்ஷ:) எனக்கு

எதைத் தருவீர்? (மமகிம் தாஸ்யஸி) உம்மிடம் என்ன இருக்கிறது. (கிம் அஸ்தி?) உமது திருவடிகளில் பக்தியையே தாரும். (தவ பாதாம்புஜ பக்திமேவ தேஹி) உம்மால் எளிதில் கொடுக்கக் கூடியது, உம்மால் மட்டுமே தரக்கூடியது இது ஒன்றே. என்னிடம் கருணை கொண்டு என் உள்ளத்தில். நுழைந்து அதனை நெகிழ்த்தி உமது அன்பையும் அருளையும் தருகிற பக்தி வெள்ளத்தைப் பெருகச் செய்வீர். 'யாம் இரப்பவை பொருளும் பொன்னுமல்ல. நின்பால் அன்பும் நின் அருளும் மட்டுமே' நான் என்னைத் தருவேன், நீர் உம்மைத் தாரீர்.

**यदा कृतांभोनिधिसेतुबन्धनः करस्थलाधःकृत पर्वताधिपः ।**
**भवानि ते लंघित पद्मसंभवः तदा शिवार्चा स्तव भावन क्षमः ॥ ८८ ॥**

> யதா க்ருதாம்போநிதி ஸேதுபந்தந:
> கரஸ்தலாத: க்ருத பர்வதாதிப: ।
> பவாநி தே லங்க்கித பத்மஸம்பவ:
> ததா ஶிவார்சா ஸ்தவ பாவந க்ஷம: ॥ 88 ॥

சிவ பெருமானே! (ஶிவ) எப்போது கடல் மீது அணைகட்டுபவனுகவோ, (க்ருதாம்ப்போநிதிஸேதுபந்த்தந: யதா,) கைத்தலத்தால் விந்திய மலையை அமுக்கித்தாழ்த்துபவனு கவோ (கரஸ்த்தல – அத:க்ருத – பர்வதாதிப:) தாமரையில் உதித்த வனையும் மீறியவனுகவோ ஆவேனே (லங்க்கித பத்மஸம்ப்பவ:) அப்போது உம்மைப் பூவால் அர்ச்சனை செய்யவோ துதிக்கவோ தியானிக்கவோ இயலும். (ததா அர்ச்சாஸ்தவபாவன க்ஷம: பவானி) ராமனுல் தான் உம்மை வழிபட முடியும். அகத்தியரால்தான் துதிக்க முடியும். பிரும்மாவால் கூட உம்மைத் தியானிக்க இயலாது. அவரை மீறிய நாராயணரே அதில் ஈடுபட முடியும்.

**नतिभिर्नुतिभिस्त्वमीश पूजाविधिभिर्ध्यान समाधिभिर्न तुष्टः ।**
**धनुषा मुसलेन चाश्मभिर्वा वद ते प्रीतिकरं तथा करोमि ॥ ८९ ॥**

> நதிபிர் நுதிபிஸ் த்வமீஶ பூஜா
> விதிபிர்த்த்யாந ஸமாதிபிர் ந துஷ்ட: ।
> தநுஷா முஸலேந சாஶ்மபிர்வா
> வத தே ப்ரீதிகரம் ததா கரோமி ॥ 89 ॥

ஈசனே! (ஈஶ!) துதியாலும் பூஜையாலும் தியானத்தாலும் வணக்கத்தாலும் கூடிய ஸமாதியாலும் நீர் திருப்தி பெறவில்லையா! வில்லடியாலும் உலக்கையிடியாலும் கல்லடியாலும் தான் திருப்தி அடைந்தீரா? (நுதி: நுதிபி: பூஜாவிதிபி: த்யான ஸமாதிபி: வா ந துஷ்ட: அஸி? தநுஷா முஸலேந அஶ்மபிஶ்ச துஷ்ட: அஸி? தே ப்ரீதி கரம் வத) உமக்குத் திருப்தி தருவதைச் சொல்வீர். அப்படியே செய்கிறன் (ததா கரோமி)

அர்ஜுனன் வில்லால் அடித்தான். அதை நீர் தலையால் ஏற்றீர். சமணர்களால் சிவனை வழிபடமுடியாமல் தடுக்கப் பெற்ற சாக்கிய நாயனர் மனத்தால் பூபோடுவதாக நினைத்து, கையால் கல்லால் அடித்தார். அதை ஏற்றீர். உலக்கையால் அடித்தாலும் மனத்தில் பக்தி இருந்தால் ஏற்பீரோ! நீண்டகாலம் வழக்கை ஒட்டி நமஸ்கரித்துப் புஷ்பம் இட்டு அர்ச்சித்தும் தியானம் செய்தும் நீர் அருள்புரிய வில்லை! ஏன்! எதில் உமக்குப் பிரியம் என்பதை நீர்தான் சொல்லவேண்டும். அதனைச் செய்யத் காத்திருக்கிறேன்.

ஈசனே! உம்மை வழிபட உதவியாக எனக்கு நீர் அளித் திருக்கிற மூன்று உபகரணங்களைக் கொண்டு தான் என்னல் வழிபடமுடியும். வேறு உபகரணம் என்னிடமில்லை.

वचसा चरितं वदामि शंभोरहमुद्योग विधासु तेऽप्रसक्तः ।
मनसाकृतिमीश्वरस्य सेवे शिरसा चैव सदाशिवं नमामि ॥ ९० ॥

வசஸா சரிதம் வதாமி ஶம்போ:
அஹமுத்யோக விதாஸு தே ப்ரஸக்த: ।
மநஸாக்ருதி மீஶ்வரஸ்ய ஸேவே
ஶிரஸா சைவ ஸதாஶிவம் நமாமி ॥ 90 ॥

நான் உமக்கேற்ற சிறந்த பூஜை முறைகளில் பழகாதவன். நலமனைத்திற்கும் தோற்றுவாயான உமது திருவிளையாடலை வாயால் கூறுகிறேன் (தே உத்யோக விதாஸு அப்ரஸக்த: ஶம்போ: தே சரிதம் வசஸா வதாமி) உலகைக் கட்டி ஆள்கிற உமது வடிவை மனத்தால் வழிபடுகிறேன். (ஈஶ்வரஸ்ய ஆக்ருதிம் மநஸா ஸேவே) எப்போதும் மங்களமான உம்மையே தலையால் வணங்குகிறேன் (ஶிரஸா ச ஸதாஶிவமே வநமாமி)

आद्याऽविद्या हृद्गतानिर्गताऽऽसीत्
विद्या हृद्या हृद्गता त्व त्प्रसादात्।
सेवे नित्यं श्रीकरं त्वत्पदाब्जं
भावे मुक्तेर्भाजनं राजमौले। ९१

ஆத்யா(அ) வித்யா ஹ்ருத்கதா நிர்கதா(ஆ)ஸீத்
வித்யா ஹ்ருத்யா ஹ்ருத்கதா த்வத் ப்ரஸாதாத்।
ஸேவே நித்யம் ஸ்ரீ கரம் த்வத்பதாப்ஜம்
ப்பாவே முக்தேர் பாஜநம் ராஜமௌலே ! *91*

*பிறை சூடியே* (ராஜமௌலே) *அநாதியாக என்னைத் தொடர்கிற ஆதியான அறியாமை என் இதயத்தில் குடி கொண்டிருந்தது. அது என்னை விட்டகன்றது.* (ஆத்யா அவித்யா ஹ்ருத்கதா நிர்கதா ஆஸீத்) *ஆனந்தமளிக்கிற பேரறிவு என் இதயத்தில் உம் அருளால் இடம்பெற்றது.* (த்வத்ப்ரஸாதாத் ஹ்ருத்யா வித்யா ஹ்ருத்கதா) *வாழ்வில் பெரும் மேன்மையைத் தருவதும் உண்மையுணர்வு நிலையில் முக்தியை அடைவிப்பதுமான உமது திருவடித்தாமரையை நாள்தோறும் வழிபடுகிறேன்* (ஸ்ரீகரம் பாவே முக்தேர் பாஜநம் த்வத்பாதாப்ஜம் நித்யம் ஸேவே.)

*அறியாமை இருந்த இடத்தில் அறிவுமிருந்தது. அறியாமை தன்னைச் சுற்றி இயல்பாக மறைப்பை ஏற்படுத்திக் கொண்டது. அறிவிருந்தும் பயன் படவில்லை. இறைவனின் அருளால் அறியாமைத் தடுப்பும் அதனுல் ஏற்பட்டமறைப்பும் அகல, அறிவு தன் இயல்பால் உண்மை நிலையை துலங்கச் செய்தது. அதனுல் வாழ்வில் மேன்மையும் இப்பிறவியிலேயே- வாழ்ந்து கொண்டிருக்கும் போதே - முத்தியும் இறையருள் பெறச்செய்தது.*

दूरीकृतानि दुरितानि दुरक्षराणि दौर्भाग्य दुःख दुरहंकृति दुर्वचांसि।
सारं त्वदीय चरितं नितरां पिबन्तं गौरीश मामिह समुद्धर सत्कटाक्षैः ॥९२॥

தூரீக்ருதாநி துரிதாநி துரக்ஷராணி
தௌர்பாக்ய து:க்க துரஹங்க்ருதி துர்வசாம்ஸி।
ஸாரம் த்வதீய சரிதம் நிதராம் பிபந்தம்
கௌரீஶ மாமிஹ ஸமுத்த்தர ஸத்கடாக்ஷை: ॥ 92 ॥

*கௌரியின் ஈசனே ! (கௌரீஶ) உம் வழிபாட்டால் பாவங்களும், அவற்றில் சிலவற்றை இப்பிறவியில் அனுபவிக்க விருப்பதைச் சுட்டிக் காட்டுகிற தலை எழுத்தும், வினையின் பின் விளைவான துர்பாக்கியவரிசையும், அவற்றை அனுபவிக்கும் போது மனம் உணர்கிற துன்பங்களும், துன்பத்தை மறைக்கக் காட்டுகிற கெட்ட ஆணவமும், அதனால் வெளிப்படுகிற கொடும் சொற்களும், தூர அகற்றப்பட்டன.* **(துரிதாநி, துரக்ஷராணி, தௌர்ப்பாக்ய - து:க்க - துரஹங்க்ருதி - துர்வசாம்ஸி தூரீக்ருதானி)** *வாழ்விற்கு வலிவூட்டுகிற உமது லீலைகளை எப்போதும் நிறையப்பருகுகின்ற என்னை உமது நல்ல கடைக் கண்பார்வைகளால் கை தூக்கிவிடுவீர். இன்று வாழ்வில் அச்சமும் அவலமும் ஆணவத்தின் ஆட்டமும் இல்லை.* **(த்வதீய சரிதம் நிதராம் ஸாரம் பிபந்தம் மாம் ஸத்கடாக்ஷை: இஹ ஸமுத்த்தர)**

**सोम कलाधर मौलौ कोमल घनकन्धरे महामहसि ।**
**स्वामिनि गिरिजानाथे मामक हृदयं निरन्तरं रमताम् ।। ९३ ।।**

**ஸோம கலாதர மௌலௌ**
**கோமல கநகந்தரே மஹாமஹஸி ।**
**ஸ்வாமிநி கிரிஜாநாதே**
**மாமக ஹ்ருதயம் நிரந்தரம் ரமதாம் ॥ 93 ॥**

*என் இதயம் பிறை சூடியும், மென்மை மிக்க மேகம் போன்று கறுத்த கழுத்துள்ளவரும், என் உடைமையாளரும், பேரொளி கொண்டவருமான மலைமகள்மணாளரிடம் எப்போதும் களிப்புடன் ஈடுபடட்டும்.* **(மாமகஹ்ருதயம், ஸோமகலாதரமௌளௌ, கோமல கநகந்த்தரே, மஹா மஹஸி, ஸ்வாமிநி கிரிஜாநாதே நிரந்தரம் ரமதாம்.)**

**सा रसना ते नयने तावेव करौ स एव कृतकृत्यः ।**
**या या यौ यो भर्गं वदतीक्षेते सदार्चतः स्मरति ।। ९४ ।।**

**ஸா ரஸநா தே நயநே தாவேவ கரௌ ஸ ஏவ க்ருதக்ருத்ய: ।**
**யா யா யௌ யோ பர்கம் வததீக்ஷேதே ஸதார்சத: ஸ்மரதி ॥ 94 ॥**

*பாபத்தை வறுத்து அகற்றுபவர் பர்க்கர். அவரைப்பற்றி பேசுவதே நாக்கு. அவரைக் காண்பவையே கண்கள். அவருக்கு*

*அர்ச்சனை செய்பவையே கைகள். அவரை நினைப்பவனே பாக்யசாலி* (யா பர்கம் வததி ஸா ரஸநா. யே ஈக்ஷேதே தே நயநே) யௌ ஸதா அர்சத: தௌ கௌ. ய: ஸ்மரதி ஸ ஏவக்ருதக்ருத்ய:)

**अतिमृदुलौ मम चरणावतिकठिनं ते मनो भवानीश।**
**इति विचिकित्सां सन्त्यज शिव कथमासीद्गिरौ तथा वेशः ॥ ९५ ॥**

அதிம்ருதுலௌ மம சரணாவதிகடிநம் தே மநோ பவாநீஶ ।
இதி விசிகித்ஸாம் ஸந்த்யஜ ஶிவ கதமாஸீத்கிரௌ ததா வேஶ: ॥95॥

*பவானியின் நாதரே ! சிவபெருமானே !* (பவாநீஶ ! ஶிவ !) *என் கால்கள் மிகவும் மென்மையுள்ளவை, உன் மனமே மிகக் கடினம், என்று மனத்தைக் குழப்பிக் கொள்ளாதீர். (என் மனத்தை விடக் கடினமானது மலைப்பாறை) மெதுவான இடமே தேவை என்றால், மலையில் புகுந்து ஸஞ்சரிக்க எங்ஙனம் முடிந்தது?* (மம சரணௌ அதிம்ருதுளௌ. தே மந: அதிகடினம் இதி விசிகித்ஸாம் ஸந்த்யஜ. ததா சேத் கிரௌ வேஶ: கதம் ஆஸீத்?)

**धैर्यांकुशेन निभृतं रभसादाकृष्य भक्तिशृंखलया।**
**पुरहर चरणालाने हृदय मदेभं बधान चिद्यन्त्रैः ॥ ९६ ॥**

தைர்யாங்குஶேந நிப்ப்ருதம் ரபஸாதாக்ருஷ்ய பக்திஶ்ருங்க்கலயா ।
புரஹர சரணாலாநே ஹ்ருதய மதேபம் பதாந சித்யந்த்ரை: ॥ 96 ॥

*திரிபுரங்களை மாய்த்தவரே !* (புரஹர !) *தைரியம் என்ற துரட்டியால் அடக்கிய என் இதயமெனும் மதம்பிடித்த யானையை பக்தி எனும் சங்கிலியால் வேகமாக இழுத்து வந்து உம் திருவடியாகிற கட்டுத்தறியில் உம்மைப் பற்றிய பேரறிவெனும் பூட்டுக்கயிறுகளால் கட்டுவீர்.* (தைர்யாங்குஶேந நிப்ப்ருதம் ஹ்ருதயமதேபம் பக்திஶ்ருங்க்கலயா ரபஸாத் ஆக்ருஷ்ய சரணாலாநே சித்யந்த்ரை: பதாந)

**प्रचरत्यभितः प्रगल्भवृत्त्या मदवानेष मनःकरी गरीयान्।**
**परिगृह्य नयेन भक्तिरज्वा परम स्थाणुपदं दृढं नयामुम् ॥ ९७ ॥**

ப்ரசரத்யபித: ப்ரகல்ப்பவ்ருத்த்யா
மதவாநேஷ மந: கரீகரீயாந்।
பரிக்ருஹ்ய நயேந பக்திரஜ்ஜ்வா
பரம ஸ்தாணுபதம் த்ருடம் நயாமும் ॥ 97 ॥

மேலானவரே! (பரம!) பேருருக்கொண்ட மனம் எனும் யானை மதம்பிடித்ததாக, அடக்க இயலாத திமிர் நடையுடன் சுற்றித் திரிகிறது. (கரீயான் ஏஷ: மந:கரீ மதவான் ப்ரகல்ப்பவ்ருத்யா அபித: ஸஞ்சரதி.) இதைப் பக்தி எனும் கயிற்றால் நயமாக கட்டினுள் வசப்படுத்தி நிலைத்து நிற்குமிடம் நோக்கித் திடமாகப் பிடித்து அழைத்துச் செல்வீர். (அமும் பக்திரஜ்ஜ்வா நயேந பரிக்ருஹ்ய ஸ்த்தாணுபதம் த்ருடம் நய!)

ஸ்தோத்திரத்தை ஈசனிடம் அர்ப்பணம் செய்கிறார் ஆசாரியர்.

सर्वालंकारयुक्तां सरलपदयुतां साधुवृत्तां सुवर्णां
सद्भिस्संस्तूयमानां सरसगुणयुतां लक्षितां लक्षणाढ्याम्।
उद्यद्भूषाविशेषा मुपगतविनयां द्योतमानार्थ रेखां
कल्याणीं देव गौरीप्रिय मम कविता कन्यकां त्वं गृहाण ॥ ९८ ॥

ஸர்வாலங்காரயுக்தாம் ஸரளபதயுதாம்
ஸாதுவ்ருத்தாம் ஸுவர்ணாம்
ஸத்ப்பிஸ்ஸம்ஸ்தூயமாநாம் ஸரஸகுணயுதாம்
லக்ஷிதாம் லக்ஷணாட்ட்யாம்।
உத்யத்பூஷாவிஶேஷா முபகதவிநயாம்
த்யோதமாநார்த் தரேகாம்
கல்யாணீம் தேவ கௌரீப்ரிய மம கவிதா கந்யகாம்
த்வம் க்ருஹாண ॥ 98 ॥

தேவரே! கௌரீ தேவியிடம் பிரிய முள்ளவரே! கௌரியை இனியாளாகக் கொண்டவரே! (தேவ! கௌரீப்ரிய!) த்வம் மம கவிதாகன்யகாம் க்ருஹாண! நீர் எனது கவிதை எனும் கன்னிகையை ஏற்பீர். இவள் எல்லா அலங்காரங்களும் பூண்டவள். கவிதையாக ரூபகம் உபமா முதலிய எல்லா அலங்காரங்களும் உள்ளவள் (ஸர்வாலங்கார யுக்தாம்) மென்மையுடன் நடைபழகுபவள். அழகிய சொற்கட்டுள்ளவள்.

(ஸரளபதயுதாம்) நல்லொழுக்க முள்ளவள். விருத்தங்கள் நன்கு அமைந்தவள் (ஸாதுவ்ருத்தாம்) சிறந்த மேனிப் பொலிவுள்ளவள் - காதுக்கினிய எழுத்தமைப்பு உள்ளவள். (ஸுவர்ணாம்) நல்லோர்களால் கொண்டாடப் பெற்றவள் (ஸத்ப்பி: ஸம்ஸ்தூய மாநாம்) இனிய குணங்கள் உள்ளவள் - கவிதைக்குரிய இனிய குணங்கள் உள்ளவள். (ஸரஸ குணயுதாம்) உத்தமப் பெண்ணிற்குரிய சிறந்த லக்ஷணங்கள் பொருந்தியவள். கவிதைக்குரிய லக்ஷணங்களுள்ளவள். (லக்ஷணாட்ட்யாம்) ஒளி மிக்க ஆபரணங்கள் பூண்டவள் - கவர்ச்சியான சொல்லணிகள் கொண்டவள் (உத்யத்ப்பூஷா விஶேஷாம்) அடக்க முள்ளவள். பாவபுஷ்டியுடன் நன்கு கொண்டு செலுத்தப்பட்ட கவிதை. (உபகத விநயாம்) கைகால்களில் தனரேகையமைந்தவள். பொருள் விளக்கத்துடன் தொடர்ந்து கோடி காட்டப்பட்டவள் (த்யோதமான அர்த்தரேகாம்) இனிது மங்கள மாகப்பேசுபவள், மங்களமான கவிதையமைப்புள்ளவள். (கல்யாணீம்) இந்த கவிதை எனும் பெண்ணை ஏற்பீராக. நீர் அவளைத்தானம் ஏற்றபின் அவள் கௌரியின் தோழியாகவோ பணிப் பெண்ணாகவோ கௌரீப்ரியரான உமது விருப்பப் படியாகட்டும்.

ஆண்டவா ! இந்தத் துதியை ஏற்று விட்டீரா ! அதனால் மனம் குளிர்ந்து தேவர்களுக்கும் கிட்டாத உமது தரிசனத்தைத் தந்தருள்கிறீரே ! எனக்கு முன் தோன்றி எனது உணர்விற் குரியவராகி விட்டீரே ! ஆச்சரியம் ! ஆனால் உமக்கே இது சரி எனத் தோன்றுகிறதா?

इदं ते युक्तं वा परमशिव कारुण्यजलधे
गतौ तिर्यग्रूपं तव पदशिरो दर्शन धिया ।
हरिब्रह्माणौ तौ दिवि भुवि चरन्तौ श्रमयुतौ
कथं शंभो स्वामिन् कथय मम वेद्योऽसि पुरतः ॥ ९९ ॥

இதம் தே யுக்தம் வா பரமஶிவ காருண்யஜலதே
கதௌ திர்யக்ரூபம் தவ பதஶிரோ தர்ஶந தியா ।
ஹரிப்ரஹ்மாணௌ தௌ திவி புவி சரந்தௌ ஶ்ரமயுதௌ
கதம் ஶம்போ ஸ்வாமிந் கதய மம வேத்யோஸி புரத: ॥ 99 ॥

மங்களங்களுக்கும் மங்களமானவரே ! மங்களத்திற்கும் மேலானவரே ! மங்களங்களுக்கு நிலைப்பிடமே ! என்

*உடைமையாளரே ! கருணைக்கடலே ! இது உமக்குத் தகுமா?* **(பரமஶிவ ! ஶம்ப்போ ! ஸ்வாமின் ! காருண்ய ஜலதே ! இதம் தே யுக்தம் வா?)** *சொல்லும் ஐயனே ! எனக்கு முன் என்னால் உணரத்தக்கவராக கண்டுக் கொள்ளத்தக்கவராகி விட்டீரே !* **(கதய ! மம புரத: வேத்ய: அஸி?)** *உமது திருவடிகளையும் சிரசையும் காண்கிற ஆழ்ந்த சிந்தனையுடன், பறவை விலங்கு எனப்படுகிற குறுக்கே வளர்ந்துள்ள உயிரின வடிவம் பெற்று, வானிலும் பூமியினடியிலும் சுற்றித்திரிந்து அந்த ஹரியும் பிரும்மாவும் களைத்தனரே ! இது பொருந்துமா?* **தௌ ஹரிப்ரம்ஹாணௌ திவி புவி சரந்தௌ ஶ்ரமயுதௌ கதம்? கதய?)** *நகுதி சிறிதுமற்ற மனிதனை என்னிடத்தில் பரிவால் தரிசனம் தந்தீர், தேவர்களின் மூத்தவர்களான ஹரியும் பிரும்மாவும் உம் அடி முடி காண்கிற தீவிர முயற்சியில் அன்னமும் பன்றியுமானரே ! தேவர்களாகவே இருந்து அவர்கள் தரிசனம் ஏன் பெற முடியவில்லை? மனிதர்களாகவாவது ஆகியிருக்கலாமே? மிருகமும் பறவையுமாகத் தாழ்ந்த பின்னரும், உம் திருவடியும் முடியும் காணச் சுற்றி அலைந்துகளைத்த பின்னரும் ஏன் அவர்கள் முன் இந்த அழகிய வடிவத்துடன் தோன்ற வில்லை? எவரும் அணுக இயலாத அடிமுடி இல்லாத பெருஞ்சோதிவடிவம் ஏற்றதேன்? எல்லோரிடமும் ஏற்றத்தாழ்வில்லாத ஸர்வஸமன பரமன் என்ற புகழ்பெற்றவருக்கு இது பொருந்துமா? நான் பெற்ற பேரின்பம் ஹரிக்கும் பிரமனுக்குமே கிட்டாதது எனப் பூரிப்படைகிறேன். உமது கரை காணாத கருணை ஒரு விந்தைப் பொருள்.*

**स्तोत्रेणालमहं प्रवच्मि न मृषा देवा विरिंचादयः**
**स्तुत्यानां गणनाप्रसंग समये त्वामग्रगण्यं विदुः ।**
**माहात्म्याग्र विचारण प्रकरणे धानातुषस्तोमवत्**
**धूतास्त्वां विदुरुत्तमोत्तम फलं शंभो भवत्सेवकाः ॥ १०० ॥**

**इति श्रीमत्परमहंस परिव्राजकाचार्य श्रीमच्छंकराचार्य विरचिता**
**शिवानन्दलहरी समाप्ता ॥**

**ஸ்தோத்ரேணால மஹம் ப்ரவச்மி ந ம்ருஷா**

**தேவா விரிஞ்சாதய:**
**ஸ்துத்யாநாம் கணநாப்ரஸங்க ஸமயே**
**த்வாமக்ரகண்யம் விது:।**
**மாஹாத்ம்யாக்ர விசாரண ப்ரகரணே**
**தாநாதுஷஸ்தோமவத்**
**தூதாஸ்த்வாம் விதுருத்தமோத்தம பலம்**
**ஶம்ப்போ பவத்ஸேவகா: ॥ 100**

**இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய ஸ்ரீஶங்கராசார்ய விரசிதா ஶிவானந்தலஹரீ ஸமாப்தா ॥**

*சம்புவே !* **(ஶம்ப்போ!)** *உமது பெருமைகள் கணக் கிலடங்காதவை. உமது ஸ்வரூபம் வாக்கிற்கும் மனத்திற்கும் பொறிகளுக்கும் புலனுகாதது. துதித்து நிறைவு பெறுவதும் இயலாதது. அதனுல் துதிப்பதை இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன்.* **(ஸ்தோத்ரேண அலம்)** *இல்லாததை இருப்பதாக நான் ஏற்றிப்பேசவில்லை* **(ம்ருஷா நப்ரவச்மி)** *பிரும்மா முதலிய தேவர்கள் துதிக்கத்தக்கவர்களைக் கணக்கிடநேர்ந்த போது உம்மைத் தான் முதலில் கணிக்கத்தக்கவராக உணர்ந்தனர்.* **(விரிஞ்சாதய: தேவா: ஸ்துத் யாநாம் கணநாப்ரஸங்க ஸமயே த்வாம் அக்ரகாண்யம் விது:)***பெருமை மிக்கவரைப் பற்றி ஆராயுமிடத்தில் தானியத்துடன் உள்ள உமிக்குவியலை அகற்றுவதுபோல் மற்ற தேவர்கள் ஊதி ஒதுக்கப்பட்டார்கள்.* **மாஹாத்ம்ய அக்ர விசாரண ப்ரகரணே தே தேவா: தாநாதுஷஸ் தோமவத் தூதா:** *உம்மை வழிபடுபவர்கள் உமிநீங்கிய மிகவும் உயர்ந்த தானியமாக ஸாரப்பொருளாக உம்மையே உணர்கிறுர்கள்* **(பவத் ஸேவகா: த்வாம் உத்தமோத்தமபலம் விது:)**

*ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான*

*ஸ்ரீசங்கர பகவத்பாதர்கள் இயற்றிய*

*சிவாநந்த லஹரீ முற்றும்.*

## சுலோகங்களின் அகராதி

## ஸ்ரீ S.V. ராதாகிருஷ்ண சாஸ்த்ரி எழுதி வெளியிட்டுள்ள நூல்கள்

## ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

தமிழுரை - இரண்டாம் பதிப்பு - 503 பக்கங்கள். எளிய நடையில் ஸ்ரீ சங்கர பகவத் பாதரின் பாஷ்யம், ஸ்ரீ பராசரபட்டரின் பகவத் குணதர்பணம், ஸ்ரீ ஸத்ய ஸந்தயதீசரின் உரை இவற்றையொட்டிய விளக்கம். பாமரரும் பண்டிதரும் ஒருங்கே விரும்பிப் படித்து பயன் பெறுவதற்கேற்ற நூல் ரூ. 120/–.

**நலமிக்க வாழ்க்கை முறை** :- பல நூற்றாண்டுகளாகத் தமிழ்நாட்டில் நடைமுறையிலிருந்த வாழ்க்கை முறை - ஆயுர்வேதம் தந்துள்ள நோயற்ற வாழ்க்கை முறைக்கான உபதேசங்களை ஒட்டி நோயின்றி உடல் - மன நலத்துடன் வாழ்வதற்கான நடைமுறைகளை எளிய நடையில் விளக்கும் நூல். எளிதில் தயாரித்து அன்றாடம் பயன்படுத்தி நலம் காணும் மூலிகைகளாலான ஸாதனங்கள். விழித்தெழுவது முதல் தூங்கச் செல்லும் வரை கடைபிடிக்கத்தக்க 250 பக்கம். விலை ரூ. 48/-.

**உணவும் பானமும்** :- உணவும் பானமுமாக ஏற்கத் தக்க பொருள்களின் சிறப்புகள், பாக முறைகளின் உள்ள சிறப்புகள், ஆயுர்வேதம் கூறுகிற உணவேற்கும் வழி முறைகள் அடங்கியது. 224 பக்கம் ரூ. 48/– கிடைக்குமிடம் **S.V. ராதாகிருஷ்ணசாஸ்திரி, 22, வீரேச்வரம் அப்ரோச் ரோடு, ஸ்ரீரங்கம், திருச்சி–620 006.**

## ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

ஸ்ரீ பாஸ்கரராயர் என்ற மகான் இயற்றிய ஸௌபாக்ய பாஸ்கரம் என்ற உரையை ஒட்டியும் மற்றும் பல சாக்த நூல்களின் கோட்பாடுகளுடனும் உள்ள விரிவுரை. மூன்றும் பதிப்பு. விரிவாகம் பெற்றது. 650 பக்கங்கள். சலுகை விலை ரூ. 100. வெளியிட்டவர் - பத்மபூஷண ராமஸ்வாமி ஐயர் சாரீடீஸ் ஸொஸைடி, ஸீதாலக்ஷ்மி ராமஸ்வாமி கல்லூரி வளாகம், திருச்சிராப்பள்ளி-620002.

## ஸ்ரீ விக்நேச்வர ஸ்துதி மஞ்சரி 4 பாகங்கள்

வேதம் புராணம் ஆகமம் முதலிய நூல்களிலிருந்து திரட்டிய நூறுக்கும் மேற்பட்ட ஸ்தோத்திரங்கள். விநாயகரைப் பற்றிய 64 ஸம்ஸ்க்ருத கீதங்கள். மஹாகணபதி ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் - பாஸ்கரராயரின் பாஷ்யம், தமிழுரையுடன், ககாராதி ஸஹஸ்ரநாமம். பன்னிரண்டு அஷ்டோத்தர சத நாமாவளிகள், இருதிரிசதிகள். உச்சிஷ்ட கணபதியின் மூன்று ஸஹஸ்ரநாமங்கள், அஷ்டோத்தர சதநாம ஸ்தோத்திரங்கள், சிறிதும் பெரிதுமான விநாயக தத்வம் விளக்குகிற 70 துதிகள் ஔவையார் நக்கீரர் முதலிய பக்தர்கள் இயற்றிய அகவல் முதலிய நூல்கள் பூஜை, ஸபர்யா விதி, மந்திரக் கிரமங்கள் ஹோம விதிகள் முதலிய உபாஸநா மார்க்கத்திற்கான விளக்கங்கள் அடங்கியது. 4 பாகங்களும் ரூ. 600/–. வெளியிடுபவர் : ஸ்ரீ விக்நேச்வர வேங்கடேசுவரா டிரஸ்ட் 283, டி.டி.கே. சாலை, சென்னை-6000018.